॥ श्रीः ॥



वलुत्तूर्, वेलामूर् श्रीवरदविष्णुकविप्रणीतम्

# श्री कोमलादण्डकम्

வழுத்தூர், வேலாமூர் ஸ்ரீ வரதவிஷ்ணுகவி இயற்றிய

# ஸ்ரீ கோமளாதண்டகம்



ஸ்ரீ ஆராவமுதன் கோமளவல்லித் தாயார்- கும்பகோணம்

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்

மைலாப்பூர், சென்னை-4

2009

॥ श्रीः ॥

वलुत्तूर्, वेलामूर् श्रीवरदविष्णुकविप्रणीतम्

# श्री कोमलादण्डकम्

வழுத்தூர், வேலாமூர் ஸ்ரீ வரதவிஷ்ணுகவி இயற்றிய

# ஸ்ரீ கோமளாதண்டகம்

இயற்றியவர் :

வழுத்தூர், வேலாமூர்,

ஸ்ரீ. உ.வே. ஸ்ரீநிவாஸாசார்யர்

வெளியிடுவோர் :

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்

மைலாப்பூர், சென்னை-4

2009

॥ श्रीः ॥

ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேஶிகாய நம:

# முன்னுரை

மஹாமஹோபாத்யாய, கவி குல திலக, பத வாக்ய ப்ரமாண பாராவார பாரீண முதலிய விருதுகள் பெற்ற வேலாமூர், ஸ்ரீமத் வரத விஷ்ணு கவிஶ்ரேஷ்டர் அடியேனுடைய பூர்வர். பல நூல்கள் இயற்றிய கவி, திருக்குடந்தையில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை ஸ்தோத்ரிக்கும் வகையில் ஸ்ரீ கோமளாதண்டகத்தை அருளினர்.

ஸ்ரீமதாண்டவன் (ஸ்ரீமுஷ்ணம்) பரம க்ருபையோடு அடியேனை ஸ்ரீ கோமளாதண்டகத்தை அர்த்தத்துடன் எழுதி, ஸ்ரீ ரங்கநாத பாதுகா வுக்கு மாதா மாதம் அனுப்பும்படி அநுக்ரஹித்தாயிற்று. ஸ்ரீமதாண்டவனின் அநுக்ரஹத்தாலும் ஸ்ரீ கோமளவல்லீ நாச்சியாரின் அவ்யாஜ வாத்ஸல்யத்தாலும் இந்த தண்டகத்தின் விரிவுரை நிறைவு பெற்றது.

இந்த விரிவுரையில், அடியேனுடைய திருத்தகப்பனர் ஸ்ரீ வைகுண்டவாஸீ, வித்வான் வரத க்ருஷ்ணமாசார்யரிடமிருந்து க்ரஹித்த அர்த்த விஶேஷங்களை யதாமதி ஸமர்ப்பித்துள்ளேன். ஸம்ஸ்க்ருதம், ப்ரபந்தங்கள் என அடியேனுக்குப் புகட்டிய எந்தையாருக்குத் தன் மாணாக்கன் பாயிரம் இயம்புதல் கடனே என்ற இலக்கணப்படி தனியன் ஸமர்ப்பித்துப் பேறு பெருகிறேன்.

ஸ்ரீமத் பாரத்வாஜ குலாப்தி ஹிமகர
மஹித ஸ்வாம்யாசார்ய லப்தாங்கனம்
ஸ்ரீ வேதாந்த லக்ஷ்மண யதிபதி க்ருபயா
ப்ராப்தாகமாந்தத்வயம் ।

தத்பாத ந்யஸ்த பாரம்

விநிஹித ஹ்ருதயம் ஸ்ரீராமநாமாம்ருதே

ஸ்ரீமத் புவநகோப்த்ரு பரிசரணதியம்

வரதவிஷ்ண்வார்யம் பஜே ॥

ஸ்ரீமதாண்டவன், மாதாமாதம் ஸஞ்சிகையில் வந்ததைப் புத்தக வடிவமாக ஸ்ரீ கோமளாதண்டகத்தை வெளியிடத் திருவுள்ளம் கொண்டாயிற்று. வரும் வைகாசி மீ ஸ்ரீமத் திருவாதிரையில் புத்தகம் அச்சாகி வெளியிடப்படும் என்றும் அநுக்ரஹித்தாயிற்று. ஸ்ரீமதாண்டவன் க்ருபைக்கு கைமாறு மாயனும் காணகில்லான் என்னும் போது அடியேன் வாய்புதைத்து தண்டம் ஸமர்ப்பித்து கண்ணீர் மல்கி நிற்பதே தகும்.

*19.4.09* தாஸன், அடியேன்

வேலாமூர், வழுத்தூர் ஸ்ரீநிவாஸாசார்யன்

॥ श्रीः ॥

वलुत्तूर्, वेलामूर् श्रीवरदविष्णुकविप्रणीतम्

# श्री कोमलादण्डकम्

வழுத்தூர், வேலாமூர் ஸ்ரீ வரதவிஷ்ணுகவி இயற்றிய

## ஸ்ரீ கோமளாதண்டகம்

வழுத்தூர், வேலாமூர், ஸ்ரீ. உ.வே. ஸ்ரீநிவாஸாசார்யர்

1. वेदान्तलक्ष्मणमुनीन्द्रकृपात्तबोधं तत्पादयुग्मसरसीरुहभृङ्गराजम्।
त्रय्यन्तयुग्मकृतभूरिपरिश्रमं तं श्रीरङ्गलक्ष्मणमुनिं शरणं प्रपद्ये॥

ஸ்ரீரங்க ராமாநுஜ மஹாதேஶிகாய நம:

— ★ —

தஶோபநிஷத் பாஷ்யகாரர் தனியன்

2. येनोपनिषदां भाष्यं रामानुजमतानुगम्।
रम्यं कृतं प्रपद्ये तं रङ्गरामानुजं मुनिम्॥

ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேஶிகாய நம:

— ★ —

ஸ்ரீமத் வரதவிஷ்ணுகவி தனியன்

3. भारद्वाजकुलाब्धिशारदविधुं श्रीभाष्यपारङ्गतम्
तर्कव्याकृति तन्त्र शिक्षितधियं श्रीवाससूर्यात्मजम्।
शिष्याणां अपवर्गदायिनममुं सत्सूक्तिदुग्धाम्बुधिं
वन्दे सज्जनभूषणं वरदविष्ण्वार्यं महादेशिकम्॥

ஸ்ரீமதே வரதவிஷ்ண்வார்ய மஹாதேஶிகாய நம:

— ★ —

# ஸ்ரீ கோமலாதண்டகம்

# श्री कोमलादण्डकम्

அவதாரிகை : திருக்குடந்தை ஸ்ரீ ஶார்ங்கபாணிப் பெருமாளின் ப்ரிய மஹிஷியான ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை ஸ்தோத்தரிப்பதாக அமைந்தது இந்த ஸ்ரீ கோமளாதண்டகம். வேலாமூர், வழுத்தூர், ஸ்ரீமத் வரத விஷ்ணு கவியால் பிராட்டியின் திருமுன்பு निशमयति यथा सा என்றவாறு मितापि युक्ता स्तुतिः என்று நான்கு தண்டகங்களிலே பரவிப்பாடினூர். पदवाक्यप्रमाणज्ञः (பதவாக்ய ப்ரமாணஜ்ஞ) महामहोपाध्यायः (மஹாமஹோபாத்யாய) முதலிய பிருதாலங்க்ருதரான கவிஶ்ரேஷ்டர் ஒரு ஸமயம் ஸ்ரீ கோமளவல்லீ நாய்ச்சியாரை மங்களாஶாஸநம் செய்யத் திருக்குடந்தை எழுந்தருளினார். அங்கு, அர்சகர் முகேந, ''ஸ்ரீ கோமளவல்லித் தாயாரைப் பற்றி ஒரு ஸ்தோத்ரம் செய்யலாகாதோ'' என, அதையே பிராட்டியின் நியமனமாக ஶிரஸா வஹித்து सकल भुवनमाता என்று தொடங்கும் ஶ்லோகத்துடன் தண்டகத்தை ஸமர்ப்பித்தார். பிராட்டி அதைப் போர உகந்தாள் என்பதன் சான்ருக, இன்றும் ஸ்ரீ கோமளவல்லித் தாயார் ஸந்நிதியில் அ்டி ஶ்லோகத்தை அநுஸந்தித்து பக்தர்களுக்கு ஸேவை பண்ணி வைக்கின்றனர்.

அடியோங்களுடைய பூர்வரும் தபோபநிஷத் பாஷ்யகாரர் ஸ்ரீரங்கராமாநுஜ மஹாதேஶிகனின் திருவம்சத்தோன்றலான மஹாகவி, ஸ்ரீமத் ராமாயணம் **மஹாபாரதம்** ஆகியவற்றை खड्गा கட்கா என்னும் அரிதான பாவகையிலும் (छन्दः) ஸ்ரீ ஹநுமத் தண்டகம், அம்ருதத்வநி, ஸ்ரீ ஸீதா தண்டகம் மற்றும் सुभाषित ஶ்லோகங்களையும் இயற்றியுள்ளார்.

ஓலைச் சுவடியாக இருந்த இந்த தண்டகம் வெகு காலமுன் க்ரந்தாக்ஷரத்தில் வெளிவந்தது. 1944ல் நாகராக்ஷரத்தில், இருகரை ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமியால் ப்ரசுரிக்கப்பட்டது. அந்த ப்ரசுரத்துக்கு எளிய தமிழ் உரை எழுதியவர் அடியோங்களுடைய நெருங்கிய பந்துவும், வழுத்தூரில் ஜனித்தவரான, மஹாவித்வான், புதுக்கோட்டை ஸ்ரீநிவாஸ ராகவாசார்யர் ஸ்வாமி.

60 வருடங்களுக்கு மேலான அளவில் அந்தப் பதிப்பும் கிடைக்கவில்லை. கிடைத்த அந்தப் பதிப்பின் சில பகுதிகளைக் கொண்டும் அடியேனுடைய திருத்தகப்பனார், வித்வான் ஸ்ரீ வரத க்ருஷ்ணமாசார்யரிடமிருந்து **யதாமதி க்ரஹித்ததைக்** கொண்டும் புதிய பதிப்புக்கு முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. ஆசார்யர்களுடையவும் ஸ்ரீ கோமளவல்லித் தாயாருடையவும் க்ருபையே இம்முயற்சியை सफलமாக்கும்.

—★—

## श्री कोमलादण्डकम् स्तोत्रारम्भः

## ஸ்ரீ கோமளாதண்டகம் ஸ்தோத்ராரம்பம்

सकलभुवनमाता सागराधीशजाता

प्रणमदवनकामा भास्करक्षेत्रधामा।

शकलित भयमूला शार्ङ्गधन्वानुकूला

प्रविमलमुखबिम्बा पातु मां कोमलाम्बा॥

सकल भुवनमाता = எல்லா உலகங்களுக்கும் தாயானவளும்; सागराधीशजाता = பாற்கடலில் தோன்றியவளும்; प्रणमत् अवनकामा = தன்னை வணங்குபவர்களை ரக்ஷிக்கும் ஸங்கல்பமுடையவளும்; भास्करक्षेत्रधामा = பாஸ்கர க்ஷேத்ரமெனும் திருக்குடந்தையில்

நித்யவாஸம் செய்பவளும்; शकलितभयमूला = (ஆஶ்ரிதர்களின்) பயத்தின் மூலகாரணங்களைத் தூள் தூளாக்குபவளும்; शार्ङ्गधन्वानुकूला = ஶார்ங்கம் என்னும் வில்லை உடைய (ஶார்ங்கபாணிக்கு ப்ரியமாக நடந்து கொள்பவளும்; प्रविमलमुखविम्वा = மிகவும் பரிஶுத்தமான திருமுகமண்டலத்தை உடையவளுமான कोमलाम्बा = ஸ்ரீ கோமளவல்லித் தாயார்; मां पातु = என்னைக் காப்பாற்றட்டும்; सकलभुवनमाता = எல்லா உலகங்களுக்கும் தாயானவள்; ईश्वरीं सर्वभूतानां तामिहोपह्वये श्रियम् = (என்று ஸ்ரீஸூக்தம் ஸமஸ்த ஜீவன்களுக்கும் ஈஶ்வரியான மஹாலக்ஷ்மியை (என்னிடத்தில்) அழைக்கின்றேன். पतिं विश्वस्य = என்று உலகுக்கெல்லாம் பதியானவனுக்கு அவள் பத்நீ - ஸகல புவனத்துக்கும் தாய் - அமர கோஶமும் மஹாலக்ஷ்மியை லோகமாதா என்றே கூறும் - இந்திரா லோகமாதா மா... அவன் इदि - परमैश्वर्ये என்ற வேர்ச் சொல்லால் (தாது) அவன் இந்த்ரன் என்ற சொல்லுக்கு மிகப் பொருத்தமானவன். ஆகவே அவன் பத்நீ இந்திரா. சது:ஶ்லோகியில் யாமுனமுனியும்,

லோகைகேஶ்வரி ! லோகநாத தயிதே ! என்பார். ஶரணாகதி கத்யத்தில் பகவத் ராமாநுஜர்.

அகில ஜகந்மாதரம் - அஸ்மந்மாதரம் என்று பிராட்டியைப் பரவுவார்.

ஸ்ரீஸ்தவத்தில் ஆழ்வானும் ஸ்ரீர்தேவி ! ஸமஸ்தலோக ஜநநி!

2. ஸகல புவநமும் அவன் சொத்து. அதனால் அவன் ஸ்வாமி - அவ்வாறே அவளும் ஸ்வாமிநீ. ஜாயாபத்யோ: ந விபாக: என்று தர்ம ஸூத்ரம் ''பத்நிக்கும் பர்த்தாவுக்கும் (தனித் தனியாக) பாகம் இல்லை. இருவருக்கும் ஒரே ஐஶ்வர்யம்''.

3. பல அபசாரங்கள் செய்த நம்மை ஶிக்ஷை செய்யும் தன்மையுடைய பகவானைப் பார்த்துப் புருஷகாரமாக இருந்து நம் பயத்தைப் போக்குகிறாள்.

ஸ்ரீ குணரத்ந கோஶத்தில் கிமேதந்நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வம் உசிதைருபாயை: ।

விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந: - ஹே மஹாலக்ஷ்மி ! இந்த உலகில் தோஷமில்லாதவன், (தவறு செய்யாதவன்) யார்? என்று நினைக்கும் நீ உசிதமான உபாயங்களால், எம்பெருமானைச் சேதனரின் தோஷத்தை மறந்து போகும்படிச் செய்கிறாய். அவ்வாறு, பிதாவின் கோபத்திலிருந்து எங்களைக் காப்பதினால் நீ எங்கள் தாயாகிறாய்.

4. எங்கள் தாயாக இருப்பதால் நீ அநுக்ரஹமயீ அநுக்ரஹமே உரு எடுத்து வந்தவளே. அதனால் நித்யம் அஜ்ஞாத நிக்ரஹா தண்டிப்பது என்பதே அறியாதவள்.

ந கஶ்சித் நாऽபராத்யதி - யார் தான் தவறு செய்வதில்லை - என்று ராக்ஷஸிகளைத் தண்டிக்க எண்ணிய ஆஞ்ஜநேயரின் கைகளைக் கட்டிப் போட்டாளல்லவா?

5. ஸமஸ்த ஜநநீம் வந்தே சைதந்ய ஸ்தந்ய தாயிநீம் ஜ்ஞானமாகிற பாலைத் தன் குழந்தைகளான சேதனர்களுக்கு அளிக்கும் லோகமாதாவான பெரிய பிராட்டியை வணங்குகிறேன்.

மாதா தேவி த்வமஸி பகவாந் வாஸுதேவ: பிதா மே என்று ஸ்வாமி தேசிகன்.

ஸ்ரீ பராஶர மஹர்ஷியும்.

6. த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா । த்வயைதத் விஷ்ணுநா சாம்ப! ஜகத் வ்யாப்தம் சராசரம் ॥ நமாமி ஸர்வலோகாநாம் ஜநநீம் அப்திஸம்பவாம் ।

அநயோ: பரம் ந வித்யதே - ஸ்ரீ. விஷ்ணு புராணம். 1.8.35.

இந்த (பகவான்-லக்ஷ்மீ) இருவரைக் காட்டிலும் மேலானது இல்லை.

உயர்வற உயர்நலம் உடையவன் : மூன்று சொல்லிலும் காரமான ('2 'என்ற எழுத்தான) பிராட்டி இருக்கின்றாள்.

1. சில திருக்குடந்தை அன்பர்கள் தமிழிலேயே ஸ்தோத்ரம், விரிவுரைகளை எழுதும்படிப் பணித்தனர். அவ்வாறே முதல் ஶ்லோகம் தமிழில் எழுதப் பெறுகிறது.

ஸகல புவந மாதா, ஸாகராதீஶ ஜாதா

ப்ரணமதவந காமா பாஸ்கர க்ஷேத்ர தாமா ।

ஶகலித பய மூலா, ஶார்ங்க தந்வாநுகூலா

ப்ரவிமல முக பிம்பா, பாது மாம் கோமளாம்பா ॥

2. பங்குனி மீ இதழில் ஸகல புவந மாதா என்பதன் விரிவுரை தரப்பட்டது. தற்போது ஸாகராதீஶ ஜாதா என்பதன் விரிவைப் பார்ப்போம்.

3. *(ஸாகராதீஶ ஜாதா - இதி)* ஸமுத்ரராஜரின் பெண்ணாய் பாற்கடலில் தோன்றியவளாய்

*கலஶ ஜலதி கந்யா வல்லரீ கல்பஶாகீ*

*(வரதராஜபஞ்சாஶத்)*

அமுதம் கடைய ஏற்ற கலஶம் போன்ற ஸமுத்ரத்தில் தோன்றியவள்.

4. தேவௌ தாத்ருவிதாதாரௌ ப்ருகோ: க்யாதிரஸூயத ।

ஶ்ரியஞ் ச தேவதேவஸ்ய பத்நீ நாராயணஸ்ய யா ॥

ப்ருகு-க்யாதி தம்பதிகளுக்கு தாதா, விதாதா என்று இரு குமாரர்களும் தேவ தேவனான நாராயணனின் பத்நீயான மஹாலக்ஷ்மீயும் பிறந்தனர். (ஸ்ரீ வி.பு. 1-8) இவ்வாறான மஹாலக்ஷ்மீ எவ்வாறு மறுபடியும் பாற்கடலில் தோன்றினாள் என்று மைத்ரேயர் கேட்க, பராஶர மஹர்ஷி விஸ்தாரமாக **ஸ்ரீ விஷ்ணு புராணம்,**

முதல் அம்ஶம், 9ம் அத்யாயத்தில் கூறியுள்ளார்.

5. ஒரு வித்யாதரீயிடமிருந்து பெற்ற மிகவும் மணமுள்ள சிறந்த மாலையைப் பெற்ற துர்வாஸர் அதை இந்த்ரன் பெறத் தகுதியுடையவனென்று இந்த்ரனிடம் கொடுத்தார். அந்த மாலையின் பெருமை அறியாத இந்த்ரன் அதைத் தன் யானையான ஐராவதத்தின் மத்தகத்தில் வைத்தான். யானையும் அதைத் துதிக்கையால் எடுத்துக் கீழே போட்டுக் காலால் மிதித்து விட்டது. இந்த்ரனின் அலக்ஷ்யத்தால் வெகுண்ட துர்வாஸஸ் மஹாலக்ஷ்மி உன்னிடமிருந்து மறைந்து போவாள் என்று ஶபித்தார்.

தஸ்மாத் ப்ரநஷ்ட லக்ஷ்மீகம் த்ரைலோக்யம் தே பவிஷ்யதி என்றே அவரது ஶாபம்.

ப்ரநஷ்ட லக்ஷ்மீகம் என்பதை விஷ்ணுசித்தர் என்ற வ்யாக்யாதா திரோஹித லக்ஷ்மீகம் என்னும் ஸ்ரீதர ஸ்வாமீ என்ற ஸந்யாஸியின் வ்யாக்யாநத்தில் தாரித்ரயாபிபூதம் என்றும் கூறப்பட்டது. தத: ப்ரப்ருதி நிஶ்ரீகம் ஸஶக்ரம் புவநத்ரயம் - அது முதல் இந்த்ரன் உள்ளிட மூவுலகமும் செல்வச் செழிப்பை இழந்தது.

6. பகவான், தன் ஸங்கல்பத்தால், கூர்மாவதாரம் செய்தார். மந்தர மலையைத் தன் முதுகில் தாங்கி தேவாஸுரர்களுடன் பாற்கடலைக் கடைந்தார். பாற்கடலில் தோன்றிய பல்பொருள்களின் சிகரமாக ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தோன்றினாள். மஹாலக்ஷ்மீயை சிறப்பாக பலர் அபிஷேகம் செய்தனர். ஸ்வாமி தேஶிகன் அந்த அபிஷேக வைகரியைச் சுருக்கமாகக் கூறினார்—

*அக்ரே பர்து: ஸரஸிஜமயே பத்ரபீடே நிஷண்ணாம்*
*அம்போராஶேரதிகத ஸுதா ஸம்ப்லவாதுத்திதாம் த்வாம் ।*
*புஷ்பாஸாரஸ்தகித புவநை: புஷ்கலாவர்தகாத்யை:*
*க்லுப்தாரம்பா: கநக கலஶை: அப்யஷிஞ்சந் கஜேந்த்ரா: ॥*

ஹே மஹா லக்ஷ்மியே ! பாற் கடலைக் கடைந்தபோது அமுதத்துடன் பெண்ணமுதாய்த் தோன்றினாய். உன்

பர்த்தாவான எம்பெருமானின் திருமுன்பு தாமரைப் பூவை சிங்காதநமாகக் கொண்டு அதில் வீற்றிருந்தாய். புஷ்கலாவர்தகம் முதலிய மேகங்கள் உன்னை நன்னீராட்டின. ஐராவதம் முதலிய திக்கஜங்கள் பொற்குடங்களில் நீர் எடுத்து வந்து உனக்கு திருமஞ்ஜநம் செய்தன.

பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷஸ்தலம் ஹரே: । எல்லா தேவர்களும் பார்த்துக் கொண்டு இருக்கும்போது (அவர்களை அநாதரித்து) ஹரியின் வக்ஷஸ்தலத்தில் அமர்ந்தாள்.

**வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டே** என்று பெரியாழ்வாரும் மங்களாஶாஸநம் செய்தார்.

7. ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் ஸாகராதீஶ ஜாதா என்பதைத் தனக்கே உரிய முறையில் உத்ப்ரேக்ஷிக்கிறார்.

ஸமுத்ர: அப்தி: அகூபார: பாராவார: ஸரித்பதி: அமர கோஶம். ஸமுத்ரத்தை நதிகளின் பதி என்கிறார் அமர ஸிம்ஹன். அவ்வாறே, நதிகளை ஸமுத்ர ராஜனின் மனைவிகளாகக் கூறுவது கவிஞர் மரபு. ஸமுத்ரத்தில் ஸங்கமமாகும் காவிரியும் ஸமுத்ரராஜனின் மனைவி. திருவரங்கத்தில், காவிரியின் மணல் திட்டில், கோயில் கொண்ட ஸ்ரீரங்கநாதன் ஸமுத்ர ராஜனின் பெண்ணான மஹாலக்ஷ்மியை மணந்தார். ஸ்ரீரங்கநாதனுக்கு ஸமுத்ரராஜன் மாமனார். ஸமுத்ர ராஜனின் பத்நீயான காவிரி ஸ்ரீரங்கநாதனுக்கு மாமியார். மாமியாரான காவேரித் தாயார் ஸ்ரீரங்கநாதன் என்னும் மாப்பிள்ளை வரும்போது உரிய முறையில் ஆதித்யம் செய்ய வேண்டும். அவர் எப்போது வருகிறார் என்று மாமியாருக்குத் தெரிய வேண்டுமே! காவிரியின் பெண்ணான மஹாலக்ஷ்மீ அதற்கு ஏற்பாடு செய்கிறாள். தன் தாயார் தவறு செய்துவிடக் கூடாதே என்ற கவலை. அதனால் ஸமுத்ர ராஜன், தன் கல்யாணத்துச் சீராகக் கொடுத்த ரத்நங்களை (அவன்

ரத்நாகரனாச்சே) ஸ்ரீரங்கநாதனின் பாதுகைகளின் குமிழ்களில் போட்டு வைத்திருக்கிருள். பாதுகைகளைச் சார்த்திக் கொண்டு பெருமாள் எழுந்தருளும்போது ரத்நங்களின் இனிய நாதம் அவர் வருவதைக் காவேரித் தாயாருக்குத் தெரிவிக்கிறது. அந்த ப்லோகம் இதோ—

प्रायेण सह्यदुहितुर्नदराजकन्या

जामातुरागनमसूचनमीहमाना।

मञ्जुप्रणादसुभगैर्मणिपादुके ! त्वां

अन्तर्युतामकृत यौतकरत्नखण्डैः ॥

*(பாதுகா ஸஹஸ்ரம் நாதபத்ததி:-40)*

लक्ष्मीं क्षीरसमुद्रराजतनयां श्रीरङ्गधामेश्वरीं என்று

லக்ஷ்மீம் க்ஷீரஸமுத்ரராஜ தநயாம் ஸ்ரீரங்க தாமேப்வரீம்

பரமஶிவன் பார்வதிக்குச் சொன்ன ஸ்ரீ லக்ஷ்மீ ஸ்தோத்ரம்.

नमामि सर्वलोकानां जननीमब्धिसंभवाम्

நமாமி ஸர்வலோகாநாம் ஜநநீமப்தி ஸம்பவாம்

என்று பராபர மஹர்ஷியும் கூறினர்.

8. ஸாகராதிபஜாதா என்ற சொற்ருெடர் மஹாலக்ஷ்மீக்கு மட்டுமா பொருந்தும்? பூமி தேவிக்கும் பொருந்தும். எம்பெருமான் வராஹாவதாரமெடுத்து பூமி தேவியை ஸமுத்ரத்திலிருந்து ஹிரண்யாக்ஷனை வதம் செய்து, தன் தெத்துப் பற்களில் தூக்கிவந்தார். அதனுல் பூமிதேவியையும் ஸாகராதிபஜாதா என்று கூறத் தட்டில்லை.

ப்ருதியும் ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ। अहोरात्रे पार्श्वे

**(ஹ்ரீப்ச தே லக்ஷ்மீப்ச பத்ந்யௌ। அஹோராத்ரே பார்ப்வே)**

பூமிதேவியும் ஸ்ரீதேவியும் உன் மனைவிகள். அவர்கள் கங்குலும் பகலும் உன் பக்கத்தில் உள்ளனர்.

लक्ष्मीप्रियसखीं देवीं नमाम्यच्युतवल्लभाम्।

(லக்ஷ்மீப்ரியஸகீம் தேவீம் நமாமி அச்யுதவல்லபாம்)

மஹாலக்ஷ்மீக்கு ப்ரியமானவள் என்று भूसूक्तम्।

9. ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஸ்ரீதேவீ பூதேவீ ஆகிய இருவரையும் ஒருசேர பகவானுடன் ஸேவிக்க விழைகிறார். அதைத் தலைக்கட்ட - பாதுகைகளை ப்ரார்த்திக்கிறார்–

कमपि कनकसिन्धोः सैकते सञ्चरन्तं

कलशजलधिकन्या मेदिनी दत्तहस्तम्।

अनिशमनुभवेयं पादुके ! त्वय्यधीनं

सुचरितपरिपाकं सूरिभिः सेवनीयम्॥

कमपि இவ்வாறு என்று கூறவொண்ணாத, வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத நீலமேனி ஐயோ என்றவாறான திவ்யமங்கள விக்ரஹத்தை உடைய ஸ்ரீ ரங்கநாதன், பொன்னியாறான காவிரியின் மணல் திட்டான ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீதேவியை ஒருபுறமும், பூதேவியை மறுபுறமும் அணைத்துக் கொண்டு எழுந்தருளும் இந்த ஸேவை - ஜ்ஞாநிகளுக்கும் நித்ய ஸூரிகளுக்கும் கிடைப்பதை - **பாதுகைகள்** (ஆசார்யர்கள்) எனக்கு எப்போதும் கிடைக்கும்படிச் செய்து நான் அநுபவிக்க வேண்டும்.

10. நித்ய ஸூரிகள் ஸதா பச்யந்தி என்று எப்போதும் பகவானை ஸேவிக்கிறார்கள். கண் இமைக்காமல் அவர்கள் பகவானைப் பார்க்கிறார்கள். சேதனர்களாகிய நாம் இமைக்காமல் பார்க்க முடியவில்லை. நமக்கு இடையூறாக இமைகளைத் தந்த ப்ரஹ்மாவை கோபிகள் அவரை ஜடம் जडः என்று கோபித்துக் கொள்கின்றனர். ஸ்ரீமத் பாகவதம் 10.30.

அடதி யத் பவாநஹ்நி காநநம்

த்ருடிர் யுகாயதே த்வாமபஶ்யதாம் ।

குடில குந்தலம் ஸ்ரீமுகம் ச தே ஜட

உதீக்ஷதாம் பக்ஷ்ம க்ருத் த்ருஶாம் ॥

கண்ணா ! நீ பகலில் ஆவினங்களுடன் கானகம் சென்று விடுகிறாய். உன்னைப் பார்க்காமல் எங்களுக்கு ஒரு நிமிஷம் ஒரு யுகம் போல் இருக்கிறது. மாலையில் நீ வரும்போது கண் இமைக்காமல் உன்னை பார்க்கப் விரும்பும் எங்களுக்கு இமை கொடுத்த ப்ரஹ்மா ஜட: - அறிவிலி என்று கோபிகள் தங்கள் தாபத்தை வெளியிடுகின்றனர்.

प्रणमदवनकामा इति - ப்ரணமத் அவந காமா.

(உபாய பூதையாகவும் புருஷகார பூதையாகவும் உள்ளவளாக அறிந்து) ப்ரணாமம் செய்பவர்களை ரக்ஷிக்கும் ஸங்கல்பமுடையவள்.

உபாய பூதை என்றால் சேதனர் (நாம்) எம்பெருமானை ஶரணமாக அடைய, உரிய வழியாக, சரியான மார்கமாக பெரிய பிராட்டி இருக்கிறாள்.

புருஷகார பூதை என்றால் சேதனருக்காக (நமக்காக) எம்பெருமானிடம் பரிந்து பேசுபவள்.

பிராட்டி **அவந காமா**, அவு (अव्-रक्षणे) என்ற வேர்ச் சொல் ரக்ஷணம், காத்தல் என்னும் பொருள் கொண்டது. அவு (अव्) என்ற வேர்ச் சொல்லிருந்து **அவநம்** (अवनम्) என்ற சொல் **ல்யுட்** என்னும் மாறுபாடு அடைந்து உண்டாகிறது. **அவநம்** என்றால் காப்பாற்றுதல், ரக்ஷணம் என்று பொருள் பெறும். **அவநத்தை** பற்றி ஏன் இவ்வளவு கூற வேண்டும் என்று நினைக்கலாம். பிராட்டி நம்மை ரக்ஷிக்கும் ஸங்கல்பமுடையவள். அந்தப் பிரான் எப்படி? அவனைப் பற்றி, பெரியாழ்வாரும் மற்றவர்களும் யாது கூறுகின்றனர்?

கண்ணனைப் பற்றிப் பிள்ளைத் தமிழ் பாடியவர் என்று சிறப்புப் பெற்ற பெரியாழ்வார், அவனுக்கு நாடு, நகரத்தில் ஈடுபாடு இல்லை; வனத்தில் தான் அவனது விருப்பம்.

**காடுகளூடு போய் கன்றுகள் மேய்த்து......... கானகமெல்லாம் திரிந்து உன் கரிய திருமேனி வா.... கண்ணா ! நாளை உன் பிறந்த நாள். நாளைத் தொட்டு கன்றின் பின் போகேல் ! கோலம் செய்து இங்கே இரு.**

*நம்மாழ்வாரும்–*

எம்பெருமானே ! **பசு மேய்க்கப் போகேல்** *(திருவாய்மொழி 10.3.9)* **திருத்திலும் பசு நிரை மேய்ப்பு உவத்தி** *(திரு. 10.3.10)* (பரமபதத்தில் வீற்றிருப்பதை விடப் பசுநிரை மேயப்பதே உனக்குப் பிடித்திருக்கிறது).

பாடவல்ல நாய்ச்சியாரும்

ஆச்சர்யமான செயல்கள் செய்பவன் என்னும் பொருளில் **மாயன். மாமாயன்** என்று திருப்பாவையில் போற்றிப் புகழ்ந்து, அந்த அன்பின் சற்று மாறுபாடான வெளிப்பாடாக, தன் திருமொழியில் பெண்ணின் வருத்தம் அறியாத பெருமாள் *(13.1)* தருமம் அறியாத குறும்பனை *(14.6)* ஏலாப் பொய்கள் உரைப்பானை *(14.3)* என்றெல்லாம் கூறிவிட்டுப் பட்டிமேய்ந்தோர் என்னும் திருமொழியில் விருந்தாவனத்தே கண்டோமே என்று ஒன்பது விதமாக அவனை வனத்தில், மனதால் கண்டு அனுபவிக்கிறாள்.

**ஸ்ரீ விஷ்ணு புராணமும் வநாநி விஷ்ணு:** *(2.12.36)* என்று கூறும். இவ்வாறு, ஒருமிடராக **அவநம்** செய்யாமல் வனம் செல்வதாகக் கூறுகின்றனர்.

*3.* பகவான் (फल) பல விதரண தக்ஷ: பக்ஷபாதாநபிஜ்ஞ: *(தயாஶதகம்-33.* நமது புண்ய பாபங்களுக்குத் தகுந்தபடி பலன் கொடுப்பதில் வல்லவர். அவருக்குப் பக்ஷபாதம் கிடையாது. எல்லை இல்லாத பாபம்

செய்த நாம் பகவானிடம் நேரே சென்றால் அவருடைய தண்டனையிலிருந்து தப்பமுடியாது.

**இன்னமுதத் திருமகளென்றிவரை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளடைகின்றேனே** (அதிகார ஸங்க்ரஹம்-3)

பிராட்டியும் தன்னை முதலில் ஶரணமடைய வேண்டும் என்று கூறுகிறாள்.

ப்ராயஶ்சித்த ப்ரஸங்கே து ஸர்வபாப ஸமுத்பவவே ।

மாமேகம் தே தேவஸ்ய மஹிஷீம் ஶரணம் ஶ்ரயேத் ॥

எல்லா பாபங்களிலிருந்து விடுபட ப்ராயஶ்சித்தம் செய்ய வேண்டிய ப்ரஸ்தாவத்தில் பகவானின் பத்நியான என்னொருத்தியையே ஶரணம் அடைய வேண்டும். **லகுதந்த்ரம் 17.10ல் இவ்வாறு கூறப்பட்டதாகக் காணப்படுகிறது.**

4. ஸ்ரீ ஸாத்வத ஸம்ஹிதையிலும், மஹாலக்ஷ்மீயை முதலில் ஶரணமடைய வேண்டும் என்று வ்யாக்யானங்களில் காணப்படுகிறது.

**யாம் ஆலம்ப்ய ஸுகேந இமம் து ஸ்தரம் ஹி குணோததிம் ।**
**நிஸ்தரந்தி அசிரேண ஏவ வ்யக்தத்யாந பராயணா: ॥**

**இதன் பொருள் :** வ்யக்தமான பகவத் ரூபத்தை த்யானம் செய்பவர்கள் லக்ஷ்மியை ஆஶ்ரயித்தே இந்தத் தாண்ட முடியாத ஸத்வ ரஜஸ் தமோ குணங்களாகிற ஸமுத்ரத்தை ஶீக்கிரமாக ஸுகமாகத் தாண்டுகிறார்கள்.

5. **ஸ்ரீ ஆளவந்தார் என்னும் ஸ்ரீ யாமுந முனிகள்** பெருமாளைப் பற்றிச் சிறந்த ஸ்தோத்ரமான **ஸ்தோத்ரரத்னம்** அருளினார். அதற்கு முன்பு **சதுஶ்ஶ்லோகீ** என்று நான்கு ஶ்லோகங்களில் பிராட்டியை ஶரணமாக அடைகிறார். ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ சது:ஶ்லோகீ பாஷ்யத்தில் பகவானை நேரே உபாஸிப்பதில் பயம் உள்ளது. அந்த பயத்தை போக்குபவள்

பிராட்டி. அந்த பகவானுக்கு இணையானவள். ஆகையால் புத்திமானான ஸ்ரீ யாமுந முனிகள் பிராட்டியை முதலில் **ஸ்ரீ சது:ஶ்லோகீயால் துதிக்கிறார் என்று கூறுகிறார்.** அந்த ஶ்லோகத்தின் பகுதி இதோ,

**ஶ்ரியம் தத்ஸத்ருஶீம் ததுபஸதந த்ராஸ ஶமநீம்**

**அபிஷ்டௌதி ஸ்துத்யம் அவிததமதிர் யாமுநமுநி: ॥**

6. ஸ்ரீமத் யாமுந முனிகளின் அடியொற்றி ஸ்ரீ பாஷ்யகாரர் ஶரணாகதி கத்யத்தில் முதல் சூர்ணிகையில் **அகில ஜகந்மாதரம், அஸ்மந் மாதரம், அஶரண்ய ஶரண்யாம், அநந்ய ஶரண: ஶரணமஹம் ப்ரபத்யே:** - இதன் பொருள்; எல்லா உலகங்களுக்கும் தாயாராகவும், எனக்குத் தாயாராக உள்ளவளும் வேறு ரக்ஷகரில்லாதவர்களுக்கு காப்பாற்றுகிறவளாயுமிருக்கிற (மஹாலக்ஷ்மியை) வேறொறு உபாயமில்லாதவனாகிய நான் உபாயமாக ஶரணம் அடைகிறேன். (பக்கம் 36, 39 ஶரணாகதி கத்ய தாத்பர்யம். ப்ரதிபத அர்த்தம் திருவஹீந்த்ரபுரம், பண்டித பூஷணம், சேட்லூர் நரஸிம்மாசார்யர் ஸ்வாமியால் 1917ல் ப்ரசுரிக்கப்பட்டது).

7. விபவாவதாரத்திலும், ஸ்ரீ ராமனிடமிருந்து தண்டனை பெறுவதிலிருந்து காப்பாற்றிக் கொள்ளத்ரிஜடை ராக்ஷஸிகளைப் பிராட்டியிடம் ஶரணமடையச் சொல்கிறாள் :-

**பர்த்ஸிதாமபி யாசத்வம் ராக்ஷஸ்ய: கிம் விவக்ஷயா ? ராகவாத்தி பயம் கோரம் ராக்ஷஸாநாம் உபாகதம் ॥ ப்ரணிபாத ப்ரஸந்நா ஹி மைதிலீ ஜநகாத்மஜா । அலம் ஏஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ பயாத்** (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், ஸுந்தர காண்டம் 27ம் ஸர்கம், ஏ ராக்ஷஸிகளே ! (நம்மால்) பயமுறுத்தப்பட்ட போதிலும் (ஸீதையை) ப்ரார்த்தியுங்கள். ராகவனிடமிருந்து ராக்ஷஸர்களுக்குக் கோரமான பயம் வந்துள்ளது. ஶரணாகதி செய்வதினால்

அநுக்ரஹம் செய்பவளல்லவா இந்த ஜனகரின் பெண். இவள் தான் நம்மை பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்ற ஶக்தியுடைவள் என்று பிராட்டியை ஶரணமடைய விழைகின்றனர்.

8. ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் ஸ்ரீ பாதுகா தேவியை மஹாலக்ஷ்மியாகவே பாவிக்கிறார். ஶரணமடைந்தவரின் உபாயமாகவும் புருஷகார பூதையும் ஆக இருக்கிறாள் பாதுகாதேவி (ப்ரபாவபத்ததி-49)

**ராம பாத ஸஹதர்மசாரிணீம்**
**பாதுகே ! நிகில பாதகச் சிதம் ।**

**த்வாம் அஶேஷ ஜகதாம் அதீஶ்வரீம்**
**பாவயாமி பரதாதி தேவதாம் ।।**

ஹே பாதுகா தேவியே ! **(த்வாம் அஶேஷ ஜகதாம் அதீஶ்வரீம் பாவயாமி)** உன்னை எல்லா உலகிற்கும் ஈஶ்வரியாக - மஹாலக்ஷ்மியாக பாவிக்கிறேன். நிகில பாதகச் சிதம் - எம்பெருமானிடம் பரிந்து பேசி ஶரணகதியை ஸபலமாக்கி அதனடியாக நமது எல்லா பாபங்களையும் (புண்யங்களையும்) தீயினில் தூசாகும்படிச் செய்கிறாள். (பாபங்களும் புண்யங்களும் மோக்ஷத்து இடையூறு) **ராமபாத ஸஹர்ம சாரிணீம்** = (பாதுகா பரத்தில்) ஸ்ரீ ராமனுடைய திருவடியோடு இணைந்திருப்பதால் அவரது தர்மங்களுக்கு அநுரூபையாய் இருக்கிறாள்.

**ராம பாத ஸஹதர்மசாரிணீம்** என்றசொற்றொடர் மஹாலக்ஷ்மியையும் குறிக்கும்.

பாத ஶப்த: பூஜ்ய வாசி - பாத என்ற சொல் பூஜிக்கத்தக்கவர் என்றும் பொருளிலும் வரும். **ராம பாத** = பூஜ்ய ராமபிரானின் (அவனோடு) **ஸஹதர்ம சரீ** = ஸஹதர்மிணீ அதாவது ஸீதை என்ற மஹாலக்ஷ்மீ.

ஸீதா கல்யாண ஶ்லோகமும்

**இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ ।।**

**பரதாதி தேவதாம்** (பாதுகா பரத்தில்) பரதாழ்வானுக்கு ஆராத்ய தேவதை.

பரதாதி தேவதாம் என்பது கோமளவல்லித் தாயாரையும் குறிக்கும். ப, ர, த என்பது ஸ்ரீமந் நாதமுனிகளைக் குறிக்கும். ஸ்ரீமந் நாதமுனிகள் திருக்குடந்தை வாயிலாகத்தான் நாலாயிரத் திவ்யப் ப்ரபந்தங்களை நம்மாழ்வாரிடமிருந்து யோக தசையில் பெற்றார். அவ்வாறான நாதமுனிகளுக்கு அதிதேவதாம் என்ற பெண்பால் சொல் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை குறிப்பதில் தட்டில்லை.

9. ஸ்வாமி தேசிகன் ஸ்ரீ ந்யாஸ திலகத்தில் நாலாம் ஶ்லோகத்தில் பிராட்டி உபாயமாகவும் புருஷகாரமாகவும் இருக்கிறாள் என்று கூறுகிறார்.

10. **ப்ரணமத் அவநகாமா** என்ற சொற்றொடரிலுள்ள **ப்ரணமத்** என்ற சொல் भ(नमू-प्रह्वे) **நமூ = ப்ரஹ்வே** என்ற வேர்ச் சொல்லிலிருந்து வருகிறது.

அவ்வாறே **விதந** என்ற சொல்லும் नम् என்ற வேர்ச் சொல்லிலிருந்து வருகிறது. नमू (நமூ) என்பதன் பொருள் வணங்குதல் என்று பொதுவாகச் சொன்னாலும், **விநத** என்ற சொல் ஶரணாகதி - ந்யாஸம் என்ற பொருளில் வரும் என்று பெரியோர் கூறுவர். **விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷே** என்ற சொற்றொடருக்கு **விநத = விஶேஷேண நதா: ப்ரஹ்வீ பூதா:** என்ற பொருள் கூறி அந்த அதற்கு விரிவுரையாக ஶ்ருத ப்ரகாஶிகாசார்யர் என்னும் ஸ்ரீ வேத வ்யாஸபட்டர்–

**அஶேஷ வித்யா நிஷ்டா: ஸர்வே விவக்ஷிதா:**

இன்றைய நிலையில் மற்ற ப்ரஹ்மவித்யைகளுக்கு அதிகாரிகளில்லாததால், **விநத ந்யாஸத்தை** குறிப்பதாகக் கொள்ளலாம். அவ்வாறே **ப்ரணத** என்பதும் (ந்யாஸ)

ஶரணகதியைச் சொல்லும். ப்ரணமதவநகாமா = ஶரணமாக அடைந்தவர்களைக் காக்கும் ஸங்கல்பமுடையவள் ஸ்ரீ கோமளவல்லித் தாயார் என்று தலைக்கட்டலாம்.

1. भास्करक्षेत्रधामा इति பாஸ்கரக்ஷேத்ரதாமா

பாஸ்கரக்ஷேத்ரம் என்னும் திருக்குடந்தையை வாஸஸ்தாநமாகக் கொண்டவர். धामन् (தாமன்) என்னும் அஃறிணை, ஒன்றன் பால் சொல் வீடு. வாஸஸ் தாநம் (நிவாஸ:), ஒளி (கிரண:), காந்தி (தேஜஸ்), சிறப்பு (Glory ஸ்ரீ:) ஶக்தி (Power ப்ரபாவ:) என்னும் பொருள்களையும் குறிக்கும். ஆகவே, ஸ்ரீ கோமள வல்லித் தாயார் நித்யவாஸம் செய்யும் திருக்குடந்தையை தன் தேஜஸ்ஸாலும் ஒளிக் கிரணங்களாலும் ப்ரபாவத்தாலும் சிறப்புறச் செய்து இந்த நகரத்தின் லக்ஷ்மீகரத்துக்குக் காரணமாகிறுள். வக்ஷ:பீடம் மதுவிஜயிநோ பூஷயந்தீம் ஸ்வகாந்த்யா என்று பகவானின் திருமார்பைத் தன் காந்தியால் அழகு பெறச் செய்பவள் திருக்குடந்தையை அழகுறச் செய்வதில் ஆஶ்சர்யம் ஒன்றுமில்லை.

2. கும்பகோணம் என்னும் வடமொழிப் பெயரை விடுத்து ஆழ்வார்கள் குடந்தை, குடமூக்கு என்று பாசுரங்களில் பாடியுள்ளனர். இந்த நகருக்குப் பாஸ்கர க்ஷேத்ரம் என்ற பெயர் வரக் காரணத்தை ஸ்ரீ சக்ரபாணி ஸ்வாமி கோயில் வரலாறு, ஸ்ரீ ஶார்ங்கபாணி வைபவம் என்னும் புத்தகங்களிலிருந்து அறியலாம். குடந்தை காவிரியின் தென்கரையில் திருமழிசை ஆழ்வாரால் மங்களாஶாஸநம் செய்யப் பெற்ற திருக் கோயிலாகவும் இந்தியத் துணைக் கண்டத்தில் ஸ்ரீ சக்ரராஜனுக்கு என்று அமைந்த ஒரே தனிக் கோயிலாக விளங்குகிறது என்று ஸ்ரீ சக்ரபாணி ஸ்வாமி கோயில் ஸ்தல வரலாறு கூறுகிறது.

**தூய்மை யோகம் ஆயினுய் ! துழாயலங்கல் மாலையாய் !...**
**நாமதேயம் இன்ன தென்ன வல்லமல்ல மாகிலும்**

ஸாம வேத கீதனுய சக்ரபாணியல்லேயே - திருமழிசையாரின் திருச்சந்த விருத்தத்தின் 14ம் பாசுரம், ஸ்ரீ சக்ரபாணியை மங்களாஶாஸநம் செய்வதாகக் கூறப்படுகிறது.

3. பாஸ்கர க்ஷேத்ரம் என்ற பெயர் வரக் காரணம்:

முன்பு பாதாள உலகில் ஜாலந்தரன் என்ற அஸுரன் மற்றைய உயிரினங்களுக்குச் சொல்லொணுத் துன்பம் அளித்து வந்தான். அவனே அழிக்க வழி அறியாத ப்ரம்ஹ தேவர் ஸ்ரீ ஶார்ங்கபாணிப் பெருமானின் அருள் வேண்டித் தவமிருந்தார் பல காலம். அவரின் தவத்தின் பயனுக ஸ்ரீ சார்ங்கபாணிப் பெருமாள் தன் சக்ரத்தை ஏவினுர். சக்ராயுதம் பாதாளம் சென்று அஸுரனே அழித்து விட்டுக் குடந்தையில் காவிரியின் தென்கரையில் பூமியைப் பிளந்து கொண்டு வந்து அமர்ந்தது. அஸுரரை மாய்த்ததால் மகிழ்ந்த ப்ரம்ஹதேவர் ஸ்ரீ சக்ரராஜனே ப்ரதிஷ்டை செய்து பூஜித்து வந்தார். சக்ரராஜன் அமர்ந்த இடம் **சக்ரத் தீர்த்தம்** என்றும் அந்தப் படித்துறை சக்ரப் படித்துறை என்றும் அழைக்கப்படுகிறது.

4. ஸ்ரீ சக்ரராஜன் எல்லேயற்ற ஒளி பொருந்தியவராக இருந்தார்.

**ஸ்புரத் ஸஹஸ்ரார ஶிகாதிதீவ்ரம்**
**ஸுதர்ஶநம் பாஸ்கரகோடி துல்யம் ।**

ப்ரகாஶிக்கின்ற ஆயிரம் ஆரங்களோடு கொழுந்து விட்டு எரியும் சக்ராயுதம் கோடி ஸூர்யர்களுக்கு ஸமமான ப்ரகாஶம் உடையதாய் இருந்தது.

அதைக் கண்ணுற்ற ஸூர்யன், அஹங்காரத்தால், தன்னேக் காட்டிலும் பேரொளி இருக்கக் கூடாது என நினேத்து ஸ்ரீ சக்ரத்தாழ்வானுடன் போர் செய்ய வந்தான். ஸ்ரீ சக்ரத்தாழ்வான் அவனே எளிதாக வென்று ஒளியற்றவனுகவும் பலமிழந்தவனுகவும் செய்தார். ஒளியிழந்த ஸூர்யன் பன்னெடுங்காலம் ஸ்ரீ

சார்ங்கபாணியின் திவ்யாயுதங்களில் ஒருவரான திருவாழியாழ்வானைக் குறித்துத் தவம் செய்தார். தவத்தினுல் மகிழ்ந்த திருவாழியாழ்வான் ஒரு வைகாசி பௌர்ணமி திதியில் ஸ்ரீ சக்ரராஜனுக மூன்று கண்களுடன் எட்டு கைகளில் எட்டு ஆயுதங்களுடன் அக்நிமயமான கேஶத்துடன் ஸூர்யனுக்கு ஸேவை தந்தார். ஸூர்யனிடமிருந்து அபஹரித்த ஒளியை அவருக்கு வழங்கினுர். தனக்கு அருள் செய்தமை உலகு அறிய இந்நகரை பாஸ்கர க்ஷேத்ரம் என்று பெயரிட வேண்டினுன். பகவான் அவன் வேண்டுகோளை ஏற்க, குடந்தை பாஸ்கர க்ஷேத்ரமாகியது. ஸ்ரீ சக்ரபாணி ஸ்வாமியின் கருவறையின் உள்ளே ப்ரஹ்மன், ஸூர்யன், அக்நி பகவான், மார்கண்டேயர், ஆகியோர் படைப்புச் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளனர். ஸூர்யம் ஜித்வா என்று தொடங்கும் ஶ்லோகத்தை அநுஸந்தித்தே ஸ்ரீ சக்ரபாணிக்குக் கற்பூர ஹாரத்தி செய்கின்றனர்.

5. ஸ்ரீ ஶார்ங்கபாணி வைபவம் என்னும் புத்தகத்தில் ஸூர்யனுக்கு அருள் செய்தமையும் பாஸ்கர க்ஷேத்ரம் என்று பெயர் வந்தமைக்கும் கும்பகோண மாஹாத்ம்ய ஸ்தல புராண ஶ்லோகங்கள் இவ்வாறு உள்ளன:

இத்தம் ஸ்துதோ தேவதேவோ பாஸ்கரேண மஹாத்மநா ।
தத: ப்ரஸந்நோ பகவாந் சக்ரரூபீ ஜநார்தந: ॥
ஶார்ங்கபாணே: அபிந்நோऽஸௌ ஸர்வலோகைகமங்கள: ।
யத் தேஜஸா ஹ்ருதம் பூர்வம் தத் தஸ்மை தத்தவான் புந: ॥
தத: ஏவ ஹி தத் க்ஷேத்ரம் பாஸ்கரக்ஷேத்ரமுச்யதே ॥

ஸ்ரீ சார்ங்கபாணி எப்போதும் சேர்ந்திருப்பவரான சக்ரரூபியான பகவான் ஸூர்யனுக்கு அவன் தேஜஸ்ஸைத் திருப்பி வழங்க, குடந்தை பாஸ்கர க்ஷேத்ரமாகியது.

சித்திரை மாத உத்ஸவத்தில் (திருத்தேர் நீங்கலாக) எல்லா நாட்களிலும் ஸ்ரீ ஶார்ங்கபாணியும் ஸ்ரீ சக்ரபாணியும் சேர்ந்தே உத்ஸவம் கண்டருளுவர்.

6. பாஸ்கர க்ஷேத்ரத்தை அலங்கரிக்கும் திருக்குடந்தை தேஶிகன் என்னும் ஸ்ரீ கோபாலார்ய மஹாதேஶிகனின் தனியனுடன் நிறைவு செய்வோம்.

ஸ்ரீ க்ருஷ்ண தேஶிக பதாம்புஜ ப்ருங்கராஜம்
வேதாந்த லக்ஷ்மண முநீந்த்ர க்ருபாத்த போதம் ।
த்ரய்யந்த தேஶிக யதீந்த்ர ஶடாரி மூர்த்திம்
கோபால தேஶிக ஶிகாமணிமாஶ்ரயாமः ॥
ஸ்ரீ மதே கோபாலார்ய மஹா தேஶிகாய நமः ॥

शकलित भयमूला ஶகலித பயமூலா

(சேதநர்களான நமக்கு) பயத்தைக் கொடுக்கக் காரணமாக இருப்பவற்றைச் சிதறடிப்பவள். புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே ஶயநம் என்றவாறு மறுபடியும் மறுபடியும் பிறத்தலும் இறத்தலும் மறுபடியும் தாயின் கர்ப்பத்தை அடைவதுமாகிய இந்த ஸம்ஸாரமே நமது முக்ய பயமாகும்.

தாயின் கர்ப்பத்தில் வாஸமும், பிறத்தலும் எவ்வளவு துன்பம் என்பதை ஸ்ரீ விஷ்ணு புராணம் உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டுகிறது (ஸ்ரீ.வி.பு. 6.5.11)

அத்யந்த கடு தீக்ஷ்ண உஷ்ண லவணைர் மாத்ருபோஜநை: ।
அத்யந்த தாபை: அத்யர்த்த வர்த்தமாந வேதநை: ॥

தாயின் போஜனத்தில் உள்ள மிகவும் அதிகமான புளிப்பு, துவர்ப்பு, காரம், உஷ்ணம், உவர்ப்பு முதலியவைகளால் (கர்ப்பத்திலுள்ள ஶிஶு) மிகுந்த துன்பம் அடைகிறது.

ஶிஶு பிறக்கும் போது அதற்கு ஏற்படும் இன்னல்களை (ஸ்ரீ.வி.பு. 6.5.14/15) கூறுகிறது.

ஜாயமாந: புரீஷஸ்ருங் மூத்ர ஶுக்லாவிலாநந: ।
ப்ராஜாபத்யேந வாதேந பீட்யமாநாஸ்திபந்தந: ॥

அதோமுகோ வை க்ரியதே ப்ரபலை: ஸூதிமாருதை: ।
க்லேஶாந்நிஷ்க்ராந்திமாப்நோதி ஜடராந் மாதுராதுர: ॥

பிறக்கின்ற ஸமிஸு மலம், மூத்திரம், ரத்தம், ஸுக்லம் இவைகளால் பூசப்பட்ட முகமுடையதாய் ப்ராஜாபத்யக் காற்றினல் எலும்புகள் நெருக்கப்பட்டதாய்த் தாயின் வயிற்றிலிருந்து மிகுந்த வேதனையுடன் தலை கீழாகப் பிறக்கிறது.

2. இவ்வளவு கஷ்டங்களுடன் பிறப்பவன் வேத நூல் ஆயுளான நூறு வருடங்கள் வாழ்ந்தாலும் அதில் பாதியான 50 ஆண்டுகள் உறக்கத்தில் போகும். மீதியுள்ள காலம் குழந்தைப் பருவம் பாலகன், அதாகும் என்ற விஷய ஸுகங்களுக்காக அலையும் யௌவனம், பசி, பிணி, மூப்பு முதலிய இன்னல்களுடன் கழியும். ஆதலால், பிறவி வேண்டேன், அரங்கமா நகருளானே ! என்று தொண்டரடிப்பொடி அலற்றுவார்.

வேத நூல் பிராயம் நூறு மனிசர் தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் இவ்பதினையாண்டு
பேதை பாலகன் அதாகும் பிணி, பசி, மூப்பு துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே !

3. கர்ப்ப வாஸத்திலுள்ள கஷ்டங்கள், பிறக்கும் போது ஏற்படும் துன்பங்கள், பிறந்த பின் ஏற்படும் இன்னல்கள் இவையெல்லாம் அநுபவித்துவிட்டு மரிக்கிறன். மரித்தபின் அவன் கஷ்டங்கள் தீருமா என்றல் இல்லைஎன்றே கூற வேண்டும். அவன் பாபத்துக்குத் தக்கவாறு நரகவாஸமும் புண்யத்தின்படி ஸ்வர்க வாஸமும் பெற்று பஞ்சாக்நிவித்யை என்று சாந்தோக்யம் கூறும் வகையில் மறுபடியும் பிறக்கிறன்.

4. மேலே கூறப்பட்ட யாவும் முன்னுரையே. இத்துணை துன்பங்களும் ஒரேயடியாய்த் தொலைய, ஓர் எளிய, எல்லோரும் அநுஷ்டித்துப் பயன் பெறக் கூடிய சிறந்த உபாயத்தை நம் ஆசார்யார்கள் நமக்கு அளித்துள்ளனர். ஆசார்யர்களை அணுகி ஸகலித பயமூலா என்ற பிராட்டியின் பரிந்துரையுடன் ஶரணாகதி செய்தால், பாபங்கள் கழிந்து, ந ச புநராவர்ததே ந ச புநராவர்ததே,

திரும்பவும் (பூதலத்துக்கு) வருவதில்லை என்ற நிலை ஏற்படும். அந்தமில் பேரின்பமாகிய, கலங்காப் பெருநகரில் திருமாமணி மண்டபத்தை அடைந்து எம்பெருமானுக்கு நித்ய கைங்கர்யம் செய்யும் பேறு கிடைக்கும்.

5. மோக்ஷத்துக்கு இரு உபாயங்கள் உள்ளன என்று கூறப்படுகிறது. ஒன்று பக்தியோகம். மற்றது ப்ரபத்தி.

| | | |
|---|---|---|
| பக்தியோகம் | - | அதிக்ருதாதிகாரம் |
| ப்ரபத்தி | - | ஸர்வாதிகாரம் |
| அது துஷ்கரம் | - | இது ஸுகரம் |

அது விளம்பித்துப் பலன் கொடுக்கும். இது கடுகப் பலன் தரும்.

6. மோக்ஷத்தைக் கொடுப்பவர் ஶ்ரிய:பதி மட்டுமே. மோக்ஷமிச்சேத் ஜனார்தநாத் ''தஸ்மாத் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தம் ஆஹு: (தைத்திரியோபநிஷத்) எல்லா தவங்களைக் காட்டிலும் ந்யாஸம்'' என்னும் ஶரணாகதியே சிறந்தது.

ஸக்ருதேவ ப்ரபந்நாய தவா஽ஸ்மீதி ச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥

என்று ஸ்ரீராமபிரான், ஒரு தடவை ஶரணமடைந்து இந்த ஆத்மா உன்னுடையது என்று கூறுகின்ற எல்லா உயிரினங்களுக்கும் அபயம் அளிக்கிறேன். இது என் வ்ரதம் என்றார். ஸ்ரீ க்ருஷ்ணனும் ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ । அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்டாமி மா ஶுச: என் ஒருவனையே ஶரணம் அடை. உனது எல்லா பாபங்களையும் - புண்யங்களையும் (புண்யங்களும் மோக்ஷத்துக்குத் தடையாகும்) போக்கடித்து மோக்ஷமளிக்கிறேன்.

7. ப்ரபந்நாதந்யேஷாம் ந திஶதி முகுந்தோ நிஜபதம் ப்ரபந்நர்களைத் தவிர மற்றொருக்கு ஸ்ரீ முகுந்தன் ஸ்ரீ வைகுண்டம் தரமாட்டான். லீலா விபூதியான இவ்வுலகும்

நித்ய விபூதியான ஸ்ரீ வைகுண்டமும் அவனுடையவும் பெரிய பிராட்டியினுடையவும் சொத்து. உடமைக்காரரிடம் அவன் சொத்தான இந்த நமது ஆத்மாவை ஸமர்ப்பித்து விடவேண்டும். இதுவே ந்யாஸம், பரந்யாஸம், ஶரணாகதி என்ற ஒரே பொருளுள்ள சொற்களால் கூறப்படுகிறது. இவ்வாறு செய்யாவிட்டால் இந்த ஆத்மா அனர்த்தப்பட்டுப் போகும்.

*8. ப்ரபத்திக்கு ஐந்து அங்கங்கள் உள. அவை பின் வருவன :-*

(i) ஆநுகூல்ய ஸங்கல்பம். எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகந்தவையே செய்வதாய் உறுதி கொள்ளல்.

(ii) ப்ராதிகூல்ய வர்ஜநம் :- எம்பெருமான் திருவுள்ளத்திற்கு விபரீதமாகச் செய்யாதிருத்தல்.

(iii) மஹா விஶ்வாஸம் :- அவன் நம்மை ரக்ஷிக்க வல்லவன் என்று தேறித் தவராது நம்மை ரக்ஷிப்பான் என்று நம்புதல்.

(iv) கோப்த்ருத்வ வரணம் :- பக்தியோகம் முதலிய உபாயங்களை அநுஷ்டிக்க ஶக்தியற்ற நம் விஷயத்தில் அருள் புரிந்து அவ்வுபாயங்களின் ஸ்தானத்தில் நின்று பலன் கொடுக்குமாறு வேண்டுகை.

(v) கார்பண்யம் :- பக்தி யோகம் முதலிய உபாயங்களில் நமக்கு அதிகாரமில்லாமையையும் எம்பெருமானைத் தவிர வேறு தெய்வத்தினிடமோ மோக்ஷத்தைத் தவிர வேறு பலனிலோ பற்றில்லாமை.

((i) முதல் (v) வரை, வைகுண்டவாஸீ, வங்கிபுரம் நவநீதம் ஸ்ரீ ஸ்ரீராம தேஶிகாசார்யர் ஸ்வாமி அடைக்கலப்பத்து வ்யாக்யாநத்திலிருந்து எடுக்கப்பட்டது).

ந்யஸ்ய த்வத்பாதபத்மே வரத ! நிஜபரம் நிர்பரோ நிர்பயோऽஸ்மி -

ஹே வரத ! உன் திருவடித் தாமரையில் என் பொறுப்பை ஸமர்ப்பித்துவிட்டுப் பொறுப்பு நீங்கியவனாய், பயமற்றவனாய் (மோக்ஷம் நிஸ்சயம் என்பதால்) இருக்கிறேன்.

*(பின் குறிப்பு :-* பெரியோர்கள் மன்னிப்பார்களாக. ஶரணாகதி: என்ற விஷயத்தில் இது பால பாடமே. அவ்வளவுதான் அடியேன் அறிந்தது. சில ஸம்ப்ரதாய விஷயங்களை இளைஞர்களின் பார்வைக்குத் தருவதே குறிக்கோள். இதைப் படிப்பவர், ஓடிச் சென்று, தன் ஆசார்யனை அணுகி பரந்யாஸம் செய்து கொண்டால் இந்த பால பாடமும் ஸபலமாகும்).

१. शार्ङ्गधन्वानुकूला इति ஶார்ங்கதந்வாநுகூலா

*ஶார்ங்கமென்னும் வில்லுடையானுக்கு (ஶார்ங்கபாணிப் பெருமாளுக்கு)* அநுகூலமாக, அவன் திருவுள்ளம் உகக்கும்படி இருப்பவள் (ஸ்ரீ கோமளவல்லி நாச்சியார்). எம்பெருமான் வில்லிற்கு ஶார்ங்கம் என்று பெயர். அவன் சக்ராயுதம் ஸுதர்ஶநம், சங்கு பாஞ்ச ஜந்யம், கதை கௌமோதகீ, கத்தி, நந்தகம் என்று பெயர் பெறுவன. ஶார்ங்கதந்வாநுகூலா என்ற சொற்றொடரிலுள்ள ஶார்ங்கம் என்ற சொல் மற்ற திவ்யாயுதங்களுக்கு உபலக்ஷணம் என்பர் பெரியோர் - ஸர்வ திவ்யாயுத ப்ரதர்ஶநம் ஏதத் (அர்ஜுநனின் வில் காண்டீபம். ஶிவனின் வில் பிநாகம் அதனால் அவர் பிநாகபாணி).

2. ஸ்ரீ ஶார்ங்கபாணியைப் பற்றிக் கூறும்போதே அவன் ஸந்நிதிக்கு அருகில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத ஶத்ருக்ந ஆஞ்ஜநேய ஸஹித ஸ்ரீ ராமபிரானைப் பட்டாபிஷேக தினக் கோலத்தில் மனதால் வணங்குகிறோம். சிறந்த வில்லாளனவன், வில்லை முறித்துத் தேவியை மணந்து, வில்லை நாணேற்றி வேறோர் ராமனின் (பரசுராமனின்) கர்வத்தை அடக்கி வில்லால் தாடகை, ஸுபாஹு முதலிய ராக்ஷஸர்களைக் கொன்று

பதினாலாயிரம் அரக்கர்களையும், கர, தூஷண த்ரிஶிரஸ் முதலியவர்களை ஒரு முஹூர்த்தநேரத்தில் தான் ஒருவராகவே ஸம்ஹாரம் செய்து ராவணாதிகளையும் வில்லுக்கு இரையாக்கிய சிறந்த வில்லாளன். ஸ்ரீ ரகுவீர கத்யத்தில் ஸ்வாமி தேஶிகன் இந்நிகழ்ச்சியைத் தமக்கே உரித்தான சிறந்த முறையில் கூறுவார். விரிவுக்கஞ்சி அவற்றைக் கூறவில்லை.

3. ஶார்ங்கதந்வா என்றாலும் வில் மட்டுமா? அம்பு நிஶ்சயம் உண்டு. சேதநர்களான நாமே அம்புதான். ஸ்வாமி தேஶிகன் அடைக்கலப்பத்து என்னும் ஶரணாகதியைப் பற்றி அருளும் ப்ரபந்தத்தில், திருமகளும் திருவடிவும் என்று தொடங்கும் 10ம் பாசுரத்தில் அருள் வரதர் நிலையிலக்கில் அம்பு என நான் அமிழ்ந்தேனே - இதன் பொருள் அருளாளனான ஸ்ரீ வரதனான ஸ்திரமான லக்ஷ்யத்தில் (Target) அம்பு என்னும்படி நான் ஒன்றிப் போனேன்.

வில்லில் அம்பை நாணேற்றி மிக்க கவனத்துடன் இலக்கை நோக்கி எய்தவுடன் அம்பு இலக்கை அடைந்து அங்கேயே தங்கிவிடுகிறது. உபநிஷத் ஶரணாகதிக்கு (பரந்யாஸத்துக்கு - உபாயாநுஷ்டானத்திற்கு) இந்த உவமையைக் கூறுகிறது – முண்டகோபநிஷத்தில் (2.2.4)

ப்ரணவோ தநு: ஶரோஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்ய முச்யதே ।
அப்ரமத்தேந வேத்தவ்யம் ஶரவத் தந்மயோ பவேத் ॥

இதன் திரண்ட பொருள்: ப்ரணவம் (ஓம்) என்பது வில்லாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. இந்த ஜீவாத்மா (சேதநன்) அம்பு. ஒருமுகப்படுத்தப்பட்ட மனத்துடன் இந்த அம்பை ப்ரம்மாவாகிற இலக்கில் செலுத்தி அங்கேயே இருந்திடச் செய்ய வேண்டும். ப்ரணவ மந்த்ரத்தில் மூலமாக நம் ஆத்மாவை அதன் உரியவனான எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்க வேண்டும். எம்பெருமானான இலக்கைத் தவிர வேறு ஒன்றிலும் கவனம் சிதறாமல் அவனையே த்யாநம் செய்து அவனது

ஸ்ரீ வைகுண்டத்தை அடையலாம்.

4. ஸ்ரீமத் வரதவிஷ்ணுகவி, ஸ்ரீ கோமளவல்லி நாச்சியாரை ஶார்ங்கபாணிக்கு அநுகூலமாக இருப்பதாக அருளினார். வேத கிலம் (खिल) என்று சொல்லப்பட்ட ஸ்ரீஸூக்தம் விஷ்ணு மநோநுகூலே ! த்வத்பாத பத்மம் மயி ஸந்நிதத்ஸ்வ । ஸ்ரீ விஷ்ணுவுக்கு அவன் ஸங்கல்பம் போல் இருப்பவளே ! என்கிறது.

ஸ்ரீமத் யாமுநமுநி என்னும் ஸ்ரீ ஆளவந்தார் **ஸ்ரீ சதுஶ்லோகீ** என்னும் நான்கு ஶ்லோகங்களில் எம்பிராட்டியை ஸ்தோத்ரிக்கிறார். பல பண்டிதர்களால் வ்யாக்யாநம் செய்யப்பட்ட க்ரந்தம். சதுஶ்லோகேந பண்டித: - ஸ்ரீ சது:ஶ்லோகியின் எல்லாப் பொருட்களும் அறிந்தவனே பண்டிதன் என்று பொருள்.

ஸ்ரீ சது:ஶ்லோகீ காந்தஸ்தே புருஷோத்தம: என்று தொடங்குகிறது. புருஷோத்தமனான பகவான் உனக்குப் ப்ரியமானவன் புருஷோத்தம: தே காந்த: என்று பதிஸம்பத்தால் அவளுக்கு உத்கர்ஷம் (உயர்வு).

உல்லாஸ பல்லவித என்று தொடங்கும் ஸ்ரீ குணரத்நகோஶத்தின் இரண்டாவது ஶ்லோகத்தையும், ஸ்ரீ சது:ஶ்லோகியின் பூர்த்தியில் அநுஸந்திப்பது வழக்கம். அந்த ஶ்லோகம் வந்தே வரத வல்லபாம் என்று முடிகிறது. ஸ்ரீ வரதனுக்கு ப்ரியமானவள் என்பதால் பதியினால் சிறப்புப் பெறுகிறாள்.

ஶரணாகதி கத்யத்தில் முதல் சூர்ணிகையில் பகவந் நாராயண அபிமத அநுரூப ஸ்வரூப ரூப குண விபவ ஐஶ்வர்ய ஶீலாதி அநவதிகாதிஶய அஸங்க்யேய கல்யாண குணகணாம்.......நித்யாநபாயிநீம்......

பகவானாகிய, அதாவது ஹேயகுணங்கள் ஒன்றும் இல்லாதவருமாகிய நாராயணனுக்கு ப்ரியங்களாயும், அவருக்குத் தகுந்தவைகளான ஸ்வரூபம் விக்ரஹங்கள் (உருவங்கள்) குணங்கள், விபூதிகள், ஈஶ்வரியாக இருக்கும்

தன்மை ஸௌஶீல்யம் முதலிய எல்லையில்லாத மேன்மையையுடைய எண்ண முடியாத கல்யாண குணங்களின் கூட்டத்தை உடையவளும் எப்போதும்........ அவரைவிட்டுப் பிரியாதவளான என்று பகவத் ராமாநுஜர், பிராட்டி எல்லா விதத்திலும், பகவானுக்கு ஈடானவள் என்று கூறுகிறார்.

ப்ரஹ்ம புராணத்தில் காணப்படுகின்றது ஸ்ரீ லக்ஷ்மீ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம். ஸ்ரீர்வாஸுதேவ மஹிஷீ என்று தொடங்கும் அந்த ஸ்தோத்ரத்தில் அகலங்கா, அம்ருதாதாரா என்ற திருநாமங்கள் உள. ''களங்கமற்றவள், அம்ருத என்றால் பரமாத்மா - அந்தப் பரமாத்மாவை ஆதாரமாகக் கொண்டவள்'' என்று பொருள் கூறலாம்.

5. இதுவரை, எம்பிரானின் பெருமையால் பிராட்டி சிறப்புப் பெற்றாள் என்பதைக் கண்டோம். பிராட்டியின் பெருமையால் எம்பெருமான் சிறப்புப் பெறுவதைப் பார்ப்போம்.

அதற்குமுன், நாம் மனதில் ஸ்திரமாக அறியவேண்டியது லீலா விபூதிக்கும் நித்ய விபூதிக்கும் பெரிய பிராட்டியும் பெருமாளும் நிருபாதி ஶேஷி - பெருமாள் ஸர்வஶேஷி பிராட்டி, பெருமாளைத் தவிர, மற்ற யாவர்க்கும் ஶேஷினீ அதனால் பிராட்டியை ஏகோந ஶேஷீ (ஶேஷிணீ) என்பர். பிராட்டியைவிட்டுப் பெருமாள் ஆள்வதோ அல்லது அவனைவிட்டு அவள் ஆள்வதோ கிடையாது. ஆஶ்ரயண வேளையோடும் போக வேளையோடும் வாசியற ஒரு மிதுநமே உத்தேஶ்யம் என்று யாவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

6. அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா ! நிகரில் புகழாய் !

அலர்மேல் மங்கை அவன் மார்பைவிட்டுக் கொஞ்சமும் அகல மாட்டேன் என்கிறாள். அவள் அவன் மார்பில் அமர்ந்துள்ளதால் அவன் மார்பு திருமார்பாகிறது. அதன் காரணமாக அவனுக்கு நிகரில்லாப் புகழ்

ஏற்படுகிறது.

வேதாந்தங்கள் அவனே பரதத்வம் என்று நிர்ணயித்தது. அவளது பாத சிந்நங்களே அவன் மார்பிலே கண்டதாலேதான். ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் ஸ்ரீ ஸ்துதியில் **பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்** - உன் திருவடிகளின் செம்பஞ்சுக்குழம்பு அவன் திருமார்பில் படுவதால் அவன் திருமேனியையே அழகுறச் செய்கின்றது.

7. ஸ்ரீ ஸாத்வத ஸம்ஹிதையில், ஸ்வாமி தேஶிகன் சது:ஶ்லோகீ பாஷ்யத்தில் அருளியபடி,

**யதோऽஹம் ஆஶ்ரயஶ்சாஸ்யா மூர்த்திர் மம ததாத்மிகா ।**

எந்தக் காரணத்தால் நான் அவளுக்கு ஆதாரமோ (அந்தக் காரணத்தால் என்னுடைய ஶரீரம் அவளுடைய ஸ்வரூபமே. அவன் தன் திருநாமங்களில் பலவற்றை ஸ்ரீயோடு சேர்த்தே பெறுகிறான்.

**ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீவாஸ: ஸ்ரீபதி: ஸ்ரீமதாம்வர: ।**
**ஸ்ரீதஸ் ஸ்ரீஶஸ் ஸ்ரீநிவாஸஸ் ஸ்ரீநிதிஸ் ஸ்ரீவிபாவந: ।**
**ஸ்ரீதரஸ் ஸ்ரீகரஶ்ரேயஶ் ஸ்ரீமாந்**

**ஶ்ரத்தயா தேவோ தேவத்வமஶ்நுதே** மஹாலக்ஷ்மியால் பகவான் மேன்மையடைகிறான்.

ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் பகவான் கூறியது. **அஸ்யா மம ச சேஷா ஹி விபூதிருபயாத்மிகா** - உபயவிபூதியும் இவளுக்கும் எனக்கும் ஶேஷமாயிருக்கும்.

8. காந்தஸ்தே புருஷோத்தம: என்று பிராட்டிக்குப் புருஷோத்தமன் ப்ரியமான பர்தா என்றதின் பின் மூன்றும் ஶ்லோகத்தில் அரவிந்த மந: காந்தா என்று பிராட்டி அந்த தாமரைக் கண்ணனுக்கு ப்ரியமான பத்நீ என்று கூறப்பட்டுள்ளது.

''எம்பெருமானைச் சொன்ன விடத்தில் பிராட்டியும் சொல்லிற்றும்'' என்பதைப் பற்றி விஸ்த்ருதமாக ஸித்தோபாய ஶோதநாதிகாரத்தில் (ஸ்ரீமத்

ரஹஸ்யத்ரயஸாரத்தில் 23ம் அதிகாரம்) காணலாம்.

ஸ்ரீ கூரேஶர் ஸ்ரீஸ்தவத்தில் 6ம் ஶ்லோகத்தில்

ஜகந்நாதோऽபி நாராயணோ தந்யம் மந்யத ஈக்ஷணாத் தவ

யதஸ் ஸ்வாத்மாநம் ஆத்மேஶ்வர: ॥

ஜகந்நாதனாய் தனக்குத் தானே ஈஶ்வரனான நாராயணனும் உன் கடாக்ஷத்தால் தன்னைப் பாக்யஶாலியாகக் கருதுகிறான்.

9. விபவாவதாரத்திலும் பிராட்டியால் அவன் பெருமை அடைகிறான். ராமஸ்ஸீதாம் அநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந் - ராமன் ஸீதையை மறுபடியும் அடைந்து (அதனால்) ராஜ்யத்தை அடைந்தார். அப்ரமேயம் ஹி தத் தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா - எவருக்கு ஜநகாத்மஜா பத்நியோ, அதனால் அவருடைய தேஜஸ் அளவிடமுடையாதது.

துல்யஶீல வயோ வ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் ।
ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா ॥

(ஸுந்தர காண்டம் 16.5)

ஒத்த குணம் வயஸ் நடத்தை உடையவளும் ஒத்த குலம் அழகுகளுடன் கூடியவளான வைதேஹிக்கு ராமனே தகுந்தவர். அவருக்கு அந்த அழகிய கறுத்த கண்களையுடைய இவளே தகுந்தவள்.

10. ஆக, எம்பெருமானும் எம்பிராட்டியும் ஒத்த அநந்த கல்யாணகுணமுடையவர்கள். பெரியோர்கள் நாம் மூன்று விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறுவர். அவை (1) தத்வம் (உண்மை நிலை), (2) ஹிதம் (செயல்படும் முறை), (3) புருஷார்த்தம் (பலன்). அவைகளின் ஞானம் பெற முறையே திவ்ய தம்பதியையும் ஶரண்ய தம்பதியையும் ஶேஷிதம்பதியையும் அரணாகப் பற்றுவோம்.

प्रविमलमुखविम्वा पातु मां कोमलाम्वा ।

*ப்ரவிமலமுகபிம்பா பாதுமாம் கோமலாம்பா ।*

**தோஷமில்லாத - மாசு மருவற்ற - திருமுக மண்டலத்தை உடையவளாக ஸ்ரீ கோமளவல்லித் தாயார் என்னை ரக்ஷிக்கட்டும்.**

विम्व: *பிம்ப:* विम्वं *பிம்பம் என்று பிம்ப ஶப்தம் ஆண்பாலையும் பலவின் பாலையும் ஏற்கும்.* **பிம்ப என்ற சொல்லுக்கு மண்டலம் என்னும் பொருளுமுண்டு.**

**ஸம்ஸ்க்ருதத்தில் வாய் என்னும் அவயவத்தைக் குறிக்கும் சொல் இருப்பதாகத் தெரியவில்லை.** मुखं *(முகம்)* वदनं *(வதநம்)* आस्यं *(ஆஸ்யம்)* **என்ற சொற்கள் முகத்தையும் குறிக்கும். வாயையும் குறிக்கும்.**

**ஆக** मुखविम्वा *(முகபிம்பா)* **சிவந்த வாயை அதாவது சிவந்த அதரத்தை உடையவள் என்றும் பொருள்.**

**ஆழ்வாரும் ஒரு பிராட்டியைப் பற்றிக் கூறுங்கால்-**

*கோவை வாயாள் பொருட்டு....* **என்று கூறுவர் (திருவாய்மொழி 4.3.1)**

*2. அவள் மாசற்ற முககாந்தியுடையவள். அவன் எப்படி?*

*அவனை அமலன்..* **விமலன் என்றெல்லாம் ''நம் பாணநாதன் மங்களாஶாஸனம் செய்வார். அவனது திவ்ய கடாக்ஷமே நம்மையும் நிர்மலமாக்குகிறது.''**

*... அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்....* **(திருவாய்மொழி 1.4.9)**

*பதினெட்டு புராணங்களுள் புராண ரத்நம்* **என்று ஸ்ரீ யாமுநார்யரால் போற்றப்படும் ஸ்ரீ விஷ்ணு புராணம் எம்பெருமானை** *தத் ப்ரஹ்ம நித்யம் அஜம் அக்ஷயம் அவ்யயம்*

। ஏகஸ்வரூபம் து ஸதா ஹேயாபாவாத் ச நிர்மலம் (ஸ்ரீ.வி.பு. 1.2.13)

ஹேய குணங்களில்லாமையால் மாசற்றுள்ளான்.

அவ்வாறே, அவளும் மாசற்றுள்ளாள். அவன் ''பாது மாம்'' என்னை ரக்ஷிக்கட்டும்.

3. பொழிப்புரை : ஸ்ரீ கோமளவல்லித் தாயார் ஜகந்மாதாவாக இருக்கிறாள். திருப்பாற்கடலில் அவதரித்தவள். அவளை வணங்குபவர்களைக் காப்பாற்றும் ஸங்கல்பமுடையாள். ஆஶ்ரிதர்கள் வணங்க ஹேதுவாக பாஸ்கர க்ஷேத்ரம் என்னும் திருக்குடந்தையில் கோயில் கொண்டுள்ளாள். நமது பயங்களைக் களைகின்றவள். ஸ்ரீ சார்ங்கபாணிப் பெருமானுக்குப் ப்ரியமானவளாய் அவருக்கு அநுகூலமாக இருப்பவள். மாசற்ற திருமுக மண்டலம் உடைய ஸ்ரீ கோமளாம்பா அடியேனைக் காப்பாற்றட்டும்.

4. முதல் ஶ்லோகத்தின் விரிவுரை பூர்த்தியான அளவில், முதல் தண்டகத்தின் தமிழ் வடிவம் தற்போது தரப்படுகிறது.

முதல் தண்டகம்

புவநதல லலாம பூதாம் - நிமஜ்ஜத் வ்யதா தாப ஹ்ருத் - பூரஜாதாம்புஜாந்தர் - நிபீதாஸவ - ஸ்த்ரீஸமேதாலி - ஜங்கார - கீதா பிராமாதி - ஶீதாம்பு - ஸஹ்யாத்ரி ஜாதா - தரங்கோதத் - வாதாங்குராப்ராந்த தூதாதி கூலஸ்த - சூதாதி - புஷ்பாப்யுதிதா - துலாமோதஜாதா - திரேகப் ப்ர100ணிதா - தநுத்ரேக வாதாயநா ஸக்த - ஶீதாம்ஶு முக்யாஸ்ய லீலோத்பவத் - ஸர்வ காலோந்மிஷத் - துங்க ஶைலோல்லஸந் - நிர்மலாலோக - ஶுப்ராம்ஶு, ஜாலோத்கட, ப்ராந்திம் - அப்ராந்த - ஸத், த்ரவ்ய, விப்ராணநாஸக்த - விப்ராந்தி பூமி - க்ஷமாபால வர்யை: ஸதா பாலிதாம் - த்வஸ்த பாபாம் - ப்ரமாத்யத் கஜாலீ - கனத், கண்ட, பாளீ - மதாஸ்வாத கேளீ - ஸமுத்யத் - ரவாளீந்த்ர - பேபாபிப்ரதோளீ - ஸமுத்யந் -

நிஷத்யா - லஸத் - பண்ய - ஹ்ருத்யாம் - உதாராம், அவத்யாநபிஜ்ஞாம் ச - வித்யாவதூ - விப்ரமோத்யான - வேதாந்த வேத்யாச்ரிதாம் - ஸந்ததேஜ்யா வ்ரதாரப்த, யாஜ்யாந்த வேலா - ஹுதாஜ்யாதி - ஹவ்யாம்ச, போஜ்யாதி தேயாக்ர்ய - ராஜ்யாத்ருத - ஸ்தோத்ர - கோஷாஹதா - சேஷதோஷாம் - க்வசிந் நிர்நிமேஷாங்கநா - நிர்விசேஷாக்ருதி - ஸ்பூர்ஜத் - ஏணாக்ஷ்யுபாச்லிஷ்ட - வீணாரவோஜ்ஜீவிதைணாங்க சூடாக்ஷிகோணைக்நிஸாத் - பஞ்ச பாணாம், புரீம் கும்பகோணாஹ்வயாம் பூஷயந்தீ - ஸுராந் தோஷயந்தீ - நதாந் போஷயந்தீ, பயம் சோஷயந்தீ மராளீ - கருத் - வாத - வேகாவமக்நாப்ஜ - கர்போத்பதத் - புஷ்பலிட் ஸூசித - ஸ்வாம்பு - மஜ்ஜத் - ஜநாம்ஹோ விமுக்தே: - ஸுவர்ணாம்புஜிந்யா: தடாந்தே நமஸ்யார்த்தம் அப்யாகதை: விஸ்மயாந் - நிச்சலாங்கை - ரிவாலங்க்ருதே - புத்ரிகா ரூப தேவைர் விமாநேऽஸமாநே ஸ்திதா - கோமளாம்ப ! த்வம் அஸ்மாந் அவே: ॥ 1 ॥

—★—

முதல் தண்டகம் நாகராக்ஷரத்தில் தொடருகிறது.

भुवनतलललामभूतां निमज्जद्व्यथा तापहृत्पूरजाताम्बुजान्त-र्निपीतासव - स्त्रीसमेतालिझङ्कार गीताभिरामाति शीताम्बु सह्याद्रिजाता तरङ्गोत्थ वाताङ्कुराश्रान्त धूताधिकूलस्थ चूतादिपुष्पाभ्युदीतातुलामोद जातातिरेक प्रणीता तनुद्रेक वातायनासक्त शीतांशु मुख्यास्य लीलोद्भवत्सर्वकालोन्मिषत् तुङ्गशैलोल्लसन् निर्मलालोक शुभ्रांशु जालोत्कटभ्रान्तिं अश्रान्त सद्द्रव्य विश्राणनासक्त विश्रान्तिभूमि क्षमापालवर्यैः सदा पालितां ध्वस्तपापां प्रमाद्यद् गजाली कनद्गण्डपाली मदास्वादकेली समुद्यद् खलीन्द्र शोभि प्रतोली समुद्यन् निषद्या लसत् पण्यहृद्यां उदारामवद्यानभिज्ञां च विद्यावधू विभ्रमोद्यान वेदान्तवेद्याश्रितां सन्ततेज्या व्रतारब्ध याज्यान्तवेलाहुताज्यादि हव्यांशभोज्यादितेयाग्र्य-

राज्यादृत स्तोत्रघोषा हताशेषदोषां - कचिन्निर्निमेषाङ्गना निर्विशेषाकृति-स्पूर्जत् एणाक्ष्युपाश्लिष्ट वीणारवोज्जीवितैणाङ्कचूडाक्षिकोणाग्निसात् पञ्चबाणां - पुरीं कुम्भकोणाह्वयां भूषयन्ती, सुरान् तोषयन्ती, नतान् पोषयन्ती, भयं शोषयन्ती, मराली गरुद्वात वेगावमग्नाब्ज गर्भोत्पतत्पुष्पलिट् सूचितस्वाम्बु मज्जत् जनांहोविमुक्तेः सुवर्णाम्बुजिन्यास्तटान्ते नमस्यार्थं अभ्यागतैः विस्मयान् निश्चलाङ्गैरिवालङ्कृते पुत्रिकारूपभेदैः विमानेऽसमाने स्थिता कोमलाम्ब ! त्वं अस्मान् अवेः ॥ १ ॥

புரட்டாசி மாத ஸ்ரீ ரங்கநாத பாதுகாவில் முதல் தண்டகம் நாகர எழுத்திலும் தமிழ் எழுத்திலும் தரப்பட்டது. தற்போது அதன் ப்ரதிபத அர்த்தமும் விரிவுரையும் தரப்படுகிறது.

1.1 அவதாரிகை : ஸ்ரீ வரதவிஷ்ணு கவிஸ்ரேஷ்டர். திருக்குடந்தையின் பல சிறப்புக்களைக் கூறி, திருப் பொற்றாமரைப் புஷ்கரிணியின் பெருமைகளை விவரித்து, ஆஸ்ரிதர்களுக்காக இங்கு நித்யவாஸம் செய்யும் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் கல்யாண குணங்களைக் கோடி காட்டி, அப்பிராட்டியின் ரக்ஷணத்தைப் பிரார்த்திக்கிறார்.

1.2 ப்ரதிபத அர்த்தமும் விளக்க உரையும் :-

புவனதல ல்லாம பூதாம் : பூவுலகத்திற்கு அணிகலமானதாகவும்; திலகம் போன்றதாகவும் (உள்ள திருக்குடந்தை) பூவுலகென்பது பஞ்சாஸத் கோடி விஸ்தீர்ணை என்று கூறுவார் பெரிய வாச்சான்பிள்ளை திருப்பல்லாண்டு முதல் பாசுர வ்யாக்யானத்தில்.

1.3 ''ஆராவமுதே'' - என்று தொடங்கும் நம்மாழ்வாரின் பதினோறு பாசுரங்களே நாலாயிர திவ்ய ப்ரபந்தங்கள் வெளிவரக் காரணமாயின. இந்த 11

பாசுரங்களைக் கேட்ட ஸ்ரீமந் நாதமுனிகள் மற்ற பதிகங்களைத் தேடுபவராகத் திருக்கோளூர் சென்று கண்ணி நுண் சிறுத்தாம்பு என்னும் பதினோறு பாசுரங்களைப் பெற்றார். அஷ்டாங்க யோக ஶ்ரேஷ்டரான அவர் பன்னீராயிரம் தடவைகள் அப்பாசுரங்களை ஆவ்ருத்தி செய்ததன் பயனாக ஸ்ரீ நம்மாழ்வார் ப்ரத்யக்ஷமாகி நாலாயிர திவ்யப்ரபந்தத்தை ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு அருளினார். குடந்தைக் கிடந்தானின் ஸங்கல்பத்தினாலல்லவோ நாலாயிரம் கிடைத்தது. ஆழ்வார்களின் அருளிச் செயல்களை உலகுக்கு அளித்தவன் என்பதால் அவனும் ஓர் ஆழ்வாராகிறான் ஆராவமுதாழ்வான் என்னும் திருப்பெயரிலே. அவனது அர்ச்சனையில் ஓர் சதுர்த்யந்தம் த்ராவிட ஶ்ருதிஸந்தர்ஶகாய நம: என்றுள்ளது. அவனது பெருமை திருக்குடந்தை நகருக்கும் உரித்தாகும் जगत् च सः என்ற காரணத்தாலே. உலகுக்கெல்லாம் ஶரீரமாகவும் ஆத்மாவாகவும் உள்ளவன், குடந்தைக்கும் ஆத்மாவும் ஶரீரமாகவும் இருப்பதால் அவன் பெருமை குடந்தைக்கும் பொருந்தும். இதே பொருளிலே, திருமங்கையாழ்வார் குடந்தையே தொழுமின் (பெரிய திருமொழி 1.1.7) என்று கூறுவார்.

*1.4.* நான்கு வேதங்களுக்கு இணையானவை நம்மாழ்வாரின் நான்கு ப்ரபந்தங்கள். வேதங்களுக்கு ஷடங்கம் இருப்பது போல நம்மாழ்வாரின் நான்கு தமிழ் மறைகளுக்கு ஆறங்கம் என்று ஆறு ப்ரப்நங்களை அருளினார் திருமங்கையாழ்வார். எந்த திவ்யதேசத்து எம்பெருமானையும் மங்களாஶாஸனம் செய்யும்போது ஆங்காங்கே திருக்குடந்தை எம்பெருமானையும் பாடா தொழியார். இவர் குடந்தையே தொழுமின் என்று அருளியது போல் நம்மாழ்வாரும் அருளியுள்ளார்.

*1.5* ஸ்ரீ நம்மாழ்வார் அருளியது திருமலை பற்றியே. புரட்டாசி மாதத்தில் திருவேங்கடவனை அநுஸந்திக்காமல் போமோ ?

குன்றமேந்திக்குளிர்மழை காத்தவன்
அன்று ஞாலமளந்தபிரான் - பரன்
சென்று சேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே.

வேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம் வினையோயுமே என்கிறார். அவர் அடியொற்றியே ஸ்வாமிதேசிகனும் ப்ரபத்யே தம் கிரிம் அந்த மலையையே சரணமடைகிறேன் என்று தயாசதகத்தைத் தொடங்குவார்.

*1.6* ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை மணம் முடிக்க எம்பெருமான் தன் திருத்தேரிலேயே குடந்தைக்கு எழுந்தருளினான். அத்தேரிலேயே அவன் ஸந்நிதி அமைந்துள்ளது. அதனால்தானோ, திருமங்கைமன்னன் ரதபந்தம் என்ற பாவகையில் திருத்தேர் வடிவில் திருவெழுகூற்றிருக்கை என்னும் ப்ரபந்தம் அருளினார். சித்ரவடிவில் தேர் வரைந்து அதில் இப்ப்ரபந்த பாசுரங்கள் எவ்வாறு தேர்வடிவில் அமைந்துள்ளன என்பதைத் திருக்கோயில் கொடிமரத்தின் அருகில் உள்ள சித்ரத்தில் காணலாம். சித்ரத்தில் மட்டுமல்ல - சித்திரையிலும் திருத்தேரை ஸேவிக்கும் பாக்யம் இந்த வருஷம் கிட்டியது. திருத்தேருக்குப் புஷ்கலமாக நிதி அருளிய ஸ்ரீமுஷ்ணம் ஆண்டவன் திருத்தேரில் ஸ்ரீ சார்ங்கபாணியை மங்களாசாஸனம் செய்து திருவெழுக் கூற்றிருக்கை என்பதை திரு + எழு + கூற்று + இருக்கை என்று பிரித்து எழு ஆழ்வார்களால் பாடப்பட்டு இருப்பவர் என்று அருளியதை ஸ்ரீ ரங்கநாதபாதுகா வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள்.

*1.6* இரண்டு திவ்யதேச எம்பெருமான்கள் அர்ச்சா ஸமாதியும் மீறி ஆழ்வார்களுக்கு அருள் புரிந்தனர். சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்றும் வடமொழியில் யதோக்தகாரி என்று சொல்லப்பட்டவர் காஞ்சியில். திருக்குடந்தையில் ஸ்ரீ ஆராவமுதன், பக்திஸாரர் என்னும் திருமழிசை ஆழ்வாரின் பாசுரத்துச் சற்று எழுந்து உத்தானசாயி ஆக ஸேவை ஸாதிக்கிறார்.

நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலமேனமாய்
இடந்த மெய் குலுங்கவோ? விலங்கு மால்வரைச்சுரம்
கடந்த கால் பரந்த காவிரிக் கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழிகேசனே !

(திருச்சந்தவிருத்தம்-61)

அதனால் ஆழ்வார், திருமழிசைப்பிரான் ஆகிறார். பெருமாள் ஆராவமுதாழ்வானாகிறார். இத்துணை சிறப்புகள் பெற்ற குடந்தை, திலகம் போன்றது, அணிகலன் போன்றது என்று கவிஶ்ரேஷ்டர் கூறுவது மிகையல்ல.

2.1 நிமஜ்ஜத் : (நீரில்) நன்கு மூழ்கி தீர்தமாடுபவர்களுடைய

வ்யதா தாப ஹ்ருத் : ஶரீரத்திலும் மனதிலுமுள்ள கஷ்டங்களை போக்கடிக்கின்ற

பூர : நீர் ஆதாரங்களில் (முக்கியமாகக் காவிரியும் திருப் பொற்றாமரைப் புஷ்கரணியும்)

சூழ்புனல் குடந்தையே தொழுது - திருமங்கை ஆழ்வார் குடந்தையைச் சூழ்ந்து புனல், நீர் நிலைகள் உள்ளன என்கிறார்.

சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை செழுநீர் என்பது நல்ல ப்ரவாஹமுடைய காவிரியைக் கூறுகிறார்.

குடந்தையில் நிறைய தீர்த்தங்களுள்ளன. தீர்த்தங்கள் என்றால் தூய்மையானவர்கள் ஆசார்யர்கள் என்னும் பொருள் பெறும். கவிஶ்ரேஷ்டரின் காலத்திலும் பின்னாளிலும் திருக்குடந்தையில் பல ஆசார்ய புருஷர்களும், ஶாஸ்த்ர பண்டிதர்களும் அக்நி ஹோத்ரிகளும் இருந்தனர்.

விகாஹே தீர்த்தபஹுளாம் என்று தொடங்கும் தயாஶதகத்தின் இரண்டாம் ஶ்லோகத்தில் தீர்த்த பஹுளாம் என்பதற்கு ஆசார்ய புருஷர்கள் நிறைந்ததாய் என்று பொருள் கூறுவர்.

2.2. அந்த நீர் நிலைகளில், முக்யமாகத் திருப்பொற்றாமரைப் புஷ்கரிணியில் தாமரைகள் உள்ளன. தாமரைகளில் உள்ள தேனைப் பருகி ஆண் வண்டுகளுடையவும் பெண் வண்டுகளுடையவும் ரீங்காரம் மநோஹரமாக உள்ளது.

நீர் நிலைகளில், ஜாத = உண்டான

அம்புஜாந்த: : தாமரைகளில் உள்ள

நிபீத ஆஸவ : தேனைக் குடித்த

ஸ்த்ரீஸமேத அலி : பெண் வண்டுகளோடு கூடிய ஆண் வண்டுகளுடைய

ஜங்கார = ரீங்காரமாகிற

கீத அபிராம = பாட்டுக்களால் (இனிய ஶப்தங்களால்) மநோஹரமாக இருப்பதும்.

4. திருக்குடந்தையின் பிரிதோர் சிறப்பைக் கூறுகிறார் - அந்நகரருகில் காவிரியாறு வெள்ளமிட்டு ஓடுகிறது. ஸஹ்யாத்ரி என்னும் மலையிலிருந்து தோன்றியதால் ஸஹ்யாத்ரி ஜாதா ஆகிறாள். (கங்கோத்ரி என்னும் மலைப் பகுதியில் தோன்றியவள் கங்கா என்றும் யமுநோத்ரியில் தோன்றியவள் யமுனா என்றும் அழைக்கப்படுவது அறிந்ததே, காவிரியாற்றில் தீர்த்தம் மிகவும் குளிர்ந்ததாக உள்ளது. அந்த நதியின் அலைகளிலிருந்து குளிர்ந்த இளங்காற்று வீசுகிறது. நதியின் கரையில் மாமரம் மற்றும் புஷ்பங்களைத் தரும் மரங்கள் உள. இளங்காற்று மாமரங்களையும் மற்ற மரங்களையும் அசைத்துக் கொண்டே இருக்கிறது. முக்யமாக, மாம்பூவின் வாஸனை நிறைந்த காற்று அங்குள்ள பெண்மணிகளுக்கு ஶ்ருங்கார ரஸத்தை - மன்மத தாபத்தை மிகுதியாக உண்டாக்குகிறது. மன்மதனுக்கு பஞ்சபாணன் ஐந்து பாணங்களை உடையவன் என்று பெயர். அமரஸிம்ஹன் என்பவர் அமரகோஶத்தில் மன்மதனின் ஐந்து அம்புகளைப் பட்டியல் இடுகிறார்-

அரவிந்தம், அஶோகம் ச சூதம் ச நவமல்லிகா ।
நீலோத்பலம் ச பஞ்சைதே பஞ்சபாணஸ்ய ஸாயகா: ॥ என்று. மூன்றாவதாகக் கூறப்பட்ட சூதம் என்பது மாம்பூ. அதனால் கவிஶ்ரேஷ்டர் மாம்பூவின் நறுமணத்தோடு கூடிய காற்று மன்மததாபத்தைத் தோற்றுவிக்கிறது. நறுமணத்தின் மிகுதியுடைய காற்றை, மதிமுகமடந்தையர் உப்பரிகை ஜன்னல்கள் அருகில் அமர்ந்து முகமலர்ச்சியோடு அநுபவிக்கின்றனர். அவர்களுடைய முகத்தைப் பார்க்கும்போது உயர்ந்தமலையில் ஒளியுடன் கூடிய மாசற்ற சந்த்ர பிம்பங்களோ என்னும் ப்ராந்தியை - மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. இதன் தண்டகப் பகுதி இதோ :

| | | |
|---|---|---|
| அதிஶீத | : | மிகவும் குளிர்ந்த |
| அம்பு | : | தீர்த்தம் (நிறைந்த) |
| ஸஹ்யாத்ரி ஜாதா | : | ஸஹ்யமலையிலிருந்து உண்டான காவேரி யாற்றின் |
| தரங்க உத்த | : | அலைகளிலிருந்து எழுந்த |
| வாதாங்குர | : | இளங்காற்றினால் |
| அஶ்ராந்ததூத | : | இடைவிடாது அசைக்கப்பட்ட |
| அதி கூலஸ்த | : | கரையில் உள்ள |
| சூதா[4]தி[3] புஷ்ப | : | மா முதலிய மரங்களின் பூக்களிலிருந்து |
| அப்யுதீத | : | கிளம்பின |
| அதுல | : | இணையற்ற |
| ஆமோதஜாத | : | நறுமணக் குவியல்களின் |
| அதிரேக | : | மிகுதியினால் |
| ப்ரணீத | : | உண்டாக்கப்பட்ட |
| அதநாத்[3]ரேக | : | மன்மத தாபத்தை உடையவர்களும் |
| வாதாயன | : | (உப்பரிகையின்) ஜன்னல்களில் |
| ஆஸக்த | : | (அமர்வதில்) மிகுந்த விருப்பம் உடையவர்களான |

| | |
|---|---|
| ஶீதாம்ஶுமுகீ | : மதிமுக ஸ்த்ரீகளின் |
| ஆஸ்ய லீலா | : முகங்களின் மலர்ச்சியினின்று |
| உத்பவத் | : உண்டாகின்ற |
| ஸர்$^{3}$வ$^{4}$கால உந்மிஷத் | : என்றென்றும் ஒளியுள்ளதும் |
| துங்கஶைல உல்லஸத் | : உயரிய மலையில் ப்ரகாஶிப்பதுமான |
| நிர்மல ஆலோக | : மாசற்ற ஒளியுடைய |
| ஶஶிப்ராம்ஶுஜால | : சந்த்ரபிம்பக் கூட்டமோ என்று |
| உத்கடப்$_{4}$ராந்திம் | : மிகுந்த மயக்கத்தையுடையதும் |
| | இவ்வாறுனது திருக்குடந்தை. |

*1.1. கவிகுல திலகர் என்ற விருது பெற்ற ஸ்ரீ வரத விஷ்ணுகவி, முதல் தண்டகத்தில் மேலும் திருக்குடந்தையின் சில சிறப்புக்களைக் கூறுகிறார்.*

அஶ்ராந்த ஸத்த்ரவ்ய விஶ்ராணநாஸக்த விஶ்ராந்தி பூமி க்ஷமாபால வர்யை: ஸதா பாலிதாம்—

அஶ்ராந்த = இடை வீடின்றி, ஸத்-த்ரவ்ய = நல்ல முறையில் ஈட்டிய செல்வத்தை, விஶ்ராணன = வழங்குவதில், ஆஸக்த = மிகுந்த நாட்டமுடையவர்களுக்கு, விஶ்ராந்தி பூமி = எல்லை நிலமாயிருக்கும் (தங்கும் இடமாயிருக்கும்), க்ஷமாபால வர்யை: = சிறந்த மன்னர்களால், ஸதா பாலிதாம் = எப்போதும் ஆளப்படுகின்றதான திருக்குடந்தை–

*குடந்தையை அன்று (கவிஶ்ரேஷ்டரின் காலத்தில்) அரசாண்ட மன்னர்கள் இடையறாது நல்லோர்களுக்குத் தான தர்மங்கள் செய்தனர். அவர்களது செல்வம் சீறிய முறையில் பெறப்பட்டது என்று கவி கூறுகிறார். நிற்க, இங்கு குடந்தையை ஆண்ட மன்னர்கள் என்று குறிப்பிடப்படுவது தஞ்சாபுரி என்ற தஞ்சாவூரைத் தலை நகரமாகக் கொண்டு அரசாண்ட மராட்டிய மன்னர்களையே. அவர்களுள் ஸரபோஜி மன்னர் மிக ப்ரபலமானவர். (அவர் பெயரில் தஞ்சையில் ஓர் கலாஶாலையும் இயங்கி வருகிறது).*

*1.2.* கீழ வழுத்தூர் என்ற ஸ்ரீக்ராமம் ஸரபோஜி மன்னரின் பெயரைத் தாங்கி ஸரபோஜிராஜபுரம் என்றே அழைக்கப்படுகிறது. வருவாய்த் துறை, கல்வித் துறை என்று எங்கும் ஸரபோஜிராஜபுரம் என்றே குறிப்பிடப்படுகிறது. இந்த ஸ்ரீக்ராமத்தில் ஸரபோஜி மன்னர் ஓர் சிறிய அரண்மனை கட்டியதாகவும், அது சிதிலமடைந்து தற்போது ஒரு மேடான இடமாகக் காணப்படுகிறது. அந்த மேடான இடம் தற்போதும் அரண்மனை மேடு என்றே அழைக்கப்படுகிறது.

*1.3* காளிதாஸன் தன் மிஶ்ர காவ்யமான ரகுவம்ஶத்தில் திலீபன் என்னும் ஸூர்ய குல மன்னரின் மாண்பினைக் கூறுங்கால் பேஜே தர்மம் அநாதுர: என்பார். நோயற்றவனாக இருக்கும் போதே தர்மம் செய்தார் என்று பொருள். அவ்வாறேதான் மன்னர்கள் தான தர்மங்கள் செய்தனர் என்று கவியின் வாக்கு.

*1.4.* ஸ்ரீ வரதவிஷ்ணு கவி ஸரபோஜி மன்னரின் ஸபையில் தன், அநுப்ராஸமாய் அமைந்த ஸ்ரீ ராமாயண கட்கா, ஸ்ரீ பாரத கட்காவின் சில பகுதிகளைக் கூறியதாகவும், வெகுவாகப் பாராட்டிய மன்னர் பொன்னும் பொருளும் கொடுக்க இசைந்ததாகவும், அவற்றை ஏற்காமல் என் கூட்டுக் குடும்பத்தில் 10 பேர் உள்ளனர். இரண்டு வேளை உணவுக்குக் தேவையான உபாதாநமே எங்கள் செலவு என்றும் யாத்ராமாத்ர ப்ரஸித்யர்த்தம் ஸ்வை: கர்மபி: அகர்ஹிதை: என்ற மநுஸ்ம்ருதி ஶ்லோகத்தை (அத்யாயம் 4, ஸ்லோகம்) கூறியதாகவும் அடியேன் கூறக் கேட்டிருக்கிறேன். எனினும் அரசர் அவருக்கு ஸரபோஜி ராஜபுரத்தில் நன்செய் நிலங்களை அளித்தாராம். ''தேஹயாத்ரை குறித்துக் கவலைப்படுகின்ற ப்ரபன்னன் நாஸ்திகனாகக் கருதப்படுவான்'' எனும் காரணத்தால் கவி நிஸ்ப்ருஹராக (ஆசையற்றவராக) இருந்தார்.

*2.* த்வஸ்த பாபாம் = (குடந்தை) பாபங்களைப் போக்கடிப்பதாகவும்.

3. ப்ரமாத்யத் கஜாலீ - கனத்கண்டபாலீ
மதாஸ்வாதகேலீ - ஸமுத்யத் ரவாலீந்த்ர
ஶோபி ப்ரதோலீ ஸமுத்யந் நிஷத்யா லஸத்
பண்ய ஹ்ருத்யாம் உதாராம் அவத்யாநபிஜ்ஞாம்.

குடந்தையில் பல திருக்கோவில்கள் உள்ளன. அங்குள்ள யானைகள் மதங்கொண்டவைகளாக உள்ளன. அவைகளின் கன்னங்களில் மதஜலம் பெருகுகிறது. ஸூர்ய ஒளியில் மதஜலம் ப்ரகாஶமாக உள்ளது. மதஜலத்தைக் குடிக்கும் வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன. சிறந்த கடைத் தெரு இங்கு உள்ளது. அங்குள்ள கடைகளில் (விளக்கொளியில்) வியாபாரப் பொருட்கள் அழகாக உள்ளன. இந்நகர் விஶாலமாகவும் தோஷமென்பதே அறியாததும் ஆக உள்ளது—

ப்ரமாத்யத் = மதங்கொண்ட, கஜ அலி = யானைக் கூட்டங்களின், கனத் = ப்ரகாஶிக்கின்ற, கண்டபாலீ =கன்னங்களிலுள்ள, மத-ஆஸ்வாத-கேலீ = மத ஜலத்தைத் குடிக்கிற விளையாட்டினால், ஸமுத்யத் = உண்டான, ரவ = ரீங்காரத்தையடைய, அலீந்த்ர = சிறந்த வண்டுகளால், ஶோபி = அழகாக உள்ள, ப்ரதோலீ = வீதிகளின், ஸமுத்யத் = நன்கு உயரமான, நிஷத்யா = கடைகளில், லஸத் = ப்ரகாசிக்கின்ற, பண்ய = கடையிலுள்ள வ்யாபாரப் பொருள்களால், ஹ்ருத்யாம் = மனதைக் கவருவதாக இருப்பதும், உதாராம் = சிறந்ததாவும், அவத்ய = தோஷமென்பதையே, அநபிஜ்ஞாம் = அறியாததுமான - இவ்வாறான திருக்குடந்தை.

4. திருக்குடந்தையில் வேதாந்தங்களை நன்கு அறிந்த பல பண்டிதர்கள் இருந்தனர். கர்ம காண்டத்தில் நல்ல பரிசயமுடையவர்கள் யாக தீக்ஷையுடன் யாகங்கள் செய்த வண்ணம் உள்ளனர். யாகங்களுடைய முடிவில் பூர்ணாஹுதி ஸமயத்தில் நெய் மற்றும் ஹவ்யங்களை ஹோமம் செய்கின்றனர். அந்த ஹவ்யங்களைப் பெற தேவர்களை வேத மந்த்ரங்களுடன் ப்ரார்த்திக்கின்றனர். அவர்களின் வேதகோஷம் எல்லா தோஷங்களையும்

விலக்கும். வேதம் வல்லார்களும் யாகம் செய்பவர்களும் பூர்ணமாக ஸ்ரீ ஸரஸ்வதி கடாக்ஷம் பெற்றவர்கள்

வித்யா வதூ விப்ரம உத்யாந வேதாந்தவேதி ஆஶ்ரிதாம் ஸந்தத - இஜ்யாவ்ரத - ஆரப்த யாஜ்யாந்த வேளா - ஹுத - ஆஜ்யாதி - ஹவ்யாம்ஶ போஜி - ஆதிதேயாக்ர்ய - ராஜி ஆத்ருத - ஸ்தோத்ர கோஷ - ஆஹத அஶேஷ தோஷாம்.

வித்யா வதூ[4] = ஸ்ரீ ஸரஸ்வதிக்கு, விப்[4]ரம - உத்[3]யாந = விளையாடும் தோட்டம் போலுள்ளதும் (குடந்தை), வேதாந்த வேதி = வேதங்களின் முடிவான உபநிஷத்துக்களின் பொருள் அறிந்த பண்டிதர்களால், ஆஶ்ரிதாம் = அடையப்பட்டதும் (திருக்குடந்தை), ஸந்தத = எப்பொழுதும், இஜ்யா வ்ரத = யாக தீக்ஷைகளுடன், ஆரப்த = தொடங்கப்பட்ட, யாஜ்ய-அந்த-வேலா = யாகங்களின் பூர்த்தி வேளையில், ஹுத = ஹோமம் செய்யப்பட்ட, ஆஜ்யாதி = நெய் முதலிய, ஹவ்யாம்ஶ = ஹவ்ய பாகங்களை, போஜி = சாப்பிடுகின்ற, ஆதிதேயாக்ர்ய = தேவஶ்ரேஷ்டர்களின், ராஜி = குழுவினால், ஆத்ருத = ஏற்றுக் கொள்ளப்பட்ட (ஆதரிக்கப்பட்ட), ஸ்தோத்ர கோஷ = தோத்திர ஒலிகளால், ஆஹத = போக்கடிக்கப்பட்ட, அஶேஷ தோஷாம் = பாக்கியில்லாமல் எல்லா தோஷங்களை உடைய (திருக்குடந்தை).

யாகங்களில் நான்கு வகையானவர்கள் முக்யமானவர்கள், 1) ஹோதா, 2) அத்வர்யு, 3) உத்காதா, 4) ப்ரஹ்மா. ஹோதா என்பவர் ருக்வேத மந்த்ரங்களை ஓதுவர். அத்வர்யு, தன் மற்ற பணிகளுடன் யஜுர்வேத மந்த்ரங்களை அநுஸந்திப்பவர். உத்காதா ஸாமகானம் செய்பவர். இவர்களுக்குத் தலைமை தாங்கி நடத்துபவர் நான்கு வேதங்களும் அறிந்த ப்ரஹ்மா.

முதல் தண்டகத்தின் அநுபவம் தொடர்கிறது.

*1.1.* திருக்குடந்தையின் மற்றோர் சிறப்பைக் கூறி, ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் வாத்ஸல்யத்தைப் பேசி, பொற்றாமறைப் புஷ்கரிணியின் பெருமையையும்

திருக்கோயிலின் விமானத்தின் (கோபுரத்தின்) மேன்மையையும் ஶ்லாகித்துப் பிராட்டியின் ரக்ஷணத்தைப் ப்ரார்த்தித்து முதல் தண்டகத்தை நிறைவு செய்கிறார் மஹாமஹோபாத்யாய கவிஶ்ரேஷ்டர்.

1.2. குடந்தையில் ஓரிடத்தில் பெண்மணியொருவர் வீணையை அணைத்தவாறு சிறப்பாக வீணாகானம் செய்கிறார். தெய்வப் பெண்ணுக்கு இணையான அழகுடைய அவளது விழிகள் மானின் விழிகள் போன்றுள்ளன. அவளது வீணாகானம் ஶ்ருங்காரரஸம் மிகுந்து இருப்பது போலும். அந்த இனிய கானத்தைக் கேட்டு, மன்மதனும் உயிர் பெற்றுத் தோன்றக் கூடுமோ? சந்த்ரசேகரால் எரிக்கப்பட்ட மன்மதன் அங்கங்கள் இழந்து அநங்கன் என்று பெயர் பெற்றான். அவனை உயிர்ப்பிக்கவல்லது அவளது வீணாகானம். இந்த ஸம்பவத்தினைக் கூறும் தண்டகத்தின் பகுதி :-

**க்வசித் நிர்நிமேஷாங்கநா நிர்விஶேஷாக்ருதி ஸ்பூர்ஜத் ஏணாக்ஷி உபாஶ்லிஷ்ட வீணா ரவோஜ்ஜீவித ஏணாங்க சூடாக்ஷி கோணாக்நிஸாத் பஞ்ச பாணாம்.**

**க்வசித்** = ஓரிடத்தில் (குடந்தையில்)

**நிர்நிமேஷ அங்கநா** = இமை கொட்டுதல் இல்லாத தேவஸ்த்ரீகளைக் காட்டிலும்

**நிர்விஶேஷ** = வித்யாஸமில்லாத

**ஆக்ருதி** = உருவத்துடன்

**ஸ்பூர்ஜத்** = அழகாக உள்ள

**ஏணாக்ஷி உபாஶ்லிஷ்ட** = மான் விழி போன்ற விழிகளையுடைய பெண்களால் அணைக்கப்பட்ட

**வீணா ரவ** = வீணையின் இனிய ஒலியால்

**உஜ்ஜீவித** = உயிரூட்டப்பட்ட

ஏணாங்க சூட அக்ஷி கோண = சந்த்ரனைத் தலையில் உடைய சிவனுடைய கண் ஓரத்தினுல்

அக்நிஸாத் = எரிக்கப்பட்ட

பஞ்சபாணும் = மன்மதனை உடைய (இவ்வாறான குடந்தை).

மன்மதனுக்குப் பஞ்சபாணன் என்று பெயர். அவனது ஐந்து பாணங்கள் : 1. உன்மாதந:, 2. தாபந:, 3. பேஷாஷண:, 4. ஸ்தம்பந:, 5. ஸம்மோஹந: - காளிதாஸன் குமாரஸம்பவம் என்னும் காவ்யத்தில் கூறுகிருர். ஸ்வயம் விதாதா தபஸ: பலாநாம் கேநாऽபி காமேந தபஸ்சசார ''மற்றவர் செய்யும் தவத்திற்குப் பலன் அளிப்பவரான அவர் (ஶிவன்) ஏதோர் விருப்பத்துடன் தவம் செய்தார்'' என்பது அதன் பொருள். ஏதோர் காமத்தோடு தவம் செய்ததால் காமன் அவர் மீது தன் பாணத்தைப் ப்ரயோகிக்கத் தொடங்கினான். ஶிவனின் மனம் அந்த பாணத்தால் மாறுபாடு அடையவில்லை. மாறாக, தன் நெற்றிக் கண்ணினுல் காமனை (மன்மதனை) எரித்தார். இங்கு காளிதாஸன் ஓர் சிறப்பான கூற்றைக் கூறுகிருர். அது எக்காலத்துக்கும் பொருத்தமானது. விகார ஹேதௌ அபி விக்ரியந்தே யேஷாம் ந சேதாம்ஸி த ஏவ (தே ஏவ) தீரா:.

மனம் மாசுபட, (கையூட்டு மற்றும் தவருன விஷயங்கள்) வாய்ப்புகள் இருக்கும் போது கூட எவர்களுடைய மனங்கள் மாருமல் உறுதியாக உள்ளனவோ அவர்களே புத்திமான்கள். (தீரா: தியா ரமந்தே இதி).

2. ஸ்ரீ கோமளவல்லி நாச்சியார் அவதரித்த பொற்ருமரைப் புஷ்கரிணியின் பெருமையும் நாச்சியாரின் ரக்ஷணத்தைப் ப்ரார்த்திப்பதுமான தண்டகத்தின் அடுத்த பகுதியின் திரண்ட பொருள் - ஸ்ரீ கோமளவல்லித் தாயார் கும்பகோணம் என்னும் பெயர் பெற்ற நகரை அலங்கரிக்கிருள். அவளுடை அருளைப் பெற்று தேவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். அவளை வணங்குபவர்களை நன்கு வாழ்விப்பவளாய் அவர்களின் (ஸம்ஸார) பயத்தைப் போக்கடிக்கிருள்.

பொற்றாமரைப் புஷ்கரிணியில் தாமரைப் புஷ்பங்கள் மிகுந்து காணக் கிடைக்கின்றன. கருத்த வண்டுகள் தாமரைப் புஷ்பங்களில் அமர்ந்து உள்ளன. புஷ்கரிணியில் ஹம்ஸங்கள் உள்ளன. அவைகள் தங்கள் சிறகுகளை அடிக்கடி விரித்துக் கொள்கின்றன. விரித்த சிறகுகள் காற்றின் வேகத்தில் தாமரைத் தண்ணீரில் மூழ்குகின்றன. உள்ளே இருந்த வண்டுகள் மேல் நோக்கிச் செல்கின்றன. இங்கு ஸ்நானம் செய்பவர்களின் பாபங்கள் அவர்களை விட்டு விலகிச் செல்வது இவ்வாறுதான் என்று கூறுவது போல் உள்ளது.

பொற்றாமரைக் குளத்தருகே ஸ்ரீ நாச்சியாரின் ஸந்நிதி உள்ளது. அதன் மேல் சிறந்த விமானம் (கோபுரம்) உள்ளது. கோபுரத்தில் பதுமைகள் உள்ளன. பிராட்டியை ஸேவிக்கவந்த தேவதைகள் ஆஶ்சர்யத்தால் மெய்மறந்து பதுமைகளாக நிற்கிறார்களோ என்ற ப்ரமையைத் தோற்றுவிக்கிறது. இங்கு கோயில் கொண்ட பிராட்டி எங்களை ரக்ஷிக்கட்டும். தண்டகத்தின் பகுதி இதோ :-

**கும்பகோணாஹ்வயாம் புரீம் பூஷயந்தீ, ஸுராந் தோஷயந்தீ, நதாந் போஷயந்தீ, பயம் ஶோஷயந்தீ, மராலீ கருத்வாத வேகாவமக்நாப்ஜ, கர்போத்பதத், புஷ்பலிட் ஸூசித ஸ்வாம்பு மஜ்ஜஜ் ஜநாம்ஹோ விமுக்தே: ஸுவர்ணாம்புஜிந்யா: தடாந்தே நமஸ்யார்தம் அப்யாகதை: விஸ்மயாந் நிஶ்சலாங்கைரிவாலங்க்ருதே புத்ரிகா ரூப தேவைர் விமாநேऽஸமாநே ஸ்திதே கோமளாம்ப ! த்வம் அஸ்மாந் அவே: ॥ 1 ॥**

**கும்பகோணாஹ்வயாம் புரீம்** = கும்பகோணம் என்று பெயர் பெற்ற நகரை **பூஷயந்தீ** = அலங்கரிப்பவளும்; **ஸுராந் தோஷயந்தீ** = தேவர்களுக்கு மகிழ்ச்சியூட்டுபவளாகவும், **நதாந் போஷயந்தீ** = வணங்கினவர்களை வாழ்விப்பவளாகவும், **பயம் ஶோஷயந்தீ** = (ஸம்ஸார) பயத்தைப் போக்கடிப்பவளாக உள்ள ஸ்ரீ கோமளவல்லித் தாயார்; **மராலீ** = ஹம்ஸங்களின்; **கருத்வாதவேக** = சிறகுகளின் (அவைகளைப் பிரிப்பதால்) காற்றின் வேகத்தால்; **அவமக்ந**

அப்ஜ = மூழ்கிய தாமரைகளின்; கர்ப உத்பதத் = உட் ப்ரதேஶங்களிலிருந்து மேல் நோக்கிக் கிளம்பின; புஷ்பலிட் = (புஷ்பங்களின் ரஸத்தை நக்குகின்ற) வண்டுகளால்; ஸூசித = கோடிட்டுக் காட்டப்பட்ட; ஸ்வாம்பு மஜ்ஜத் = தன் ஜலத்தில் ஸ்நானம் செய்கிற; ஜந = மக்களின்; அம்ஹ: = பாபங்களினின்று; விமுக்தே: = விடுபட்டதை உடைய; ஸுவர்ணாம்புஜிந்யா: = பொற்றாமரையின்; தடாந்தே = கரையின் அருகில்; நமஸ்யார்தம் = வணங்குவதன் பொருட்டு; அப்யாகதை: = வந்தவர்களும்; விஸ்மயாத் = வியப்பினால்; நிஶ்சலாங்கை: இவ = அசைவற்றவர்கள் போல இருப்பவர்களும், புத்ரிகாரூப = ப்ரதிமைகள் உருவிலான; தேவை: = தேவர்களால்; அலங்க்ருதே = அலங்கரிக்கப்பட்ட; அஸமாநே = ஈடில்லாத; விமாநே = விமாநத்தில்; ஸ்திதே = எழுந்தருளியுள்ள!; கோமளாம்ப ! = கோமளவல்லித் தாயே !; த்வம் = நீ; அஸ்மாந் = எங்களை; அவே: = ரக்ஷிப்பாயாக;

முதல் தண்டகம் இவ்வாறு நிறைவு பெறுகிறது.

இரண்டாவது தண்டகத்தின் தமிழ் வடிவம் தரப்படுகிறது—

அகில ஜநநி ! ஶார்ங்கபாணி ப்ரியே ! கீரவாணி ! ப்ரஸர்பத் க்ருபாணி, ப்ரபா பந்துராணி, வ்யதா மோக்ஷணாநி, ஸ்துவத் ரக்ஷணாநி,ஸ்புடாநீக்ஷணாநி, ப்ரகாமம் நிதேஹி, ப்ரமோதம் விதேஹி ப்ரணம்யே மயி, ப்ரோல்லஸத் பத்மவாட க்ருஹே ! ஸ்வர்ண ஶாட யுதே ! ஸ்வர்ணதாட கரோக்ஷிப்த விடதலாஸ்வாத தாட ஸுஶோணேஷ்டி ! சேட பவத் தேவகோட ஶிரஸ்தாஸ்நு கோடீர ஜுஷ்டாங்க்ரி யுக்மே ! ப்ரியோரோ விஹாரே ! ப்ரக்ருஷ்டாம்ஶு ஹாரே ! மராலீ ப்ரசாரே ! மஹிஷ்டோபசாரே ! க்ருதாகவ்யுதாஸே ! க்ருபாகுப்ததாஸே ! பவத் த்ருஷ்டி லேஶோऽபவச்சேத் அதீஶோ விஶாம் வா திஶாம் வா ஜநோ ஜாயதேऽல்போऽபி மூடோப்யஹோ ! கல்பவல்லீ ஸுமாநல்ப மாத்வீ ஜரீகல்ப பூயோ பவஜ்ஜல்பபாக் கம்ஸஜித் தல்பபங்கம் கிரா கல்பயத்யந்திகே ஶார்ங்கதந்வாஹ்வயம் பாஸதே யந்மஹஸ்

தத்ப்ரியாயாம் ரமாயாம் மஹோதாரதா நித்யஸித்தா த்விதாऽபீதி ஸர்வே புதாஸ்த்வாம் ரமே ! ஶௌரி ராமே । அரவிந்தாலயே ! மே கதிர் ந த்வதந்யே ஸுரா: ஸிந்துகந்யே ! அம்ப ! லக்ஷ்மீந்திரே ! மந்திரேஷ்வக்ஷி நிக்ஷிப்யதாம் நஸ்த்வயேத்யாநமந்தி ப்ரகாமம் ஜகந்தி ப்ரமோதோல்லஸந்தி த்வயாऽமூநி ஸந்தி, ஸ்புரச்சந்த்ர ரஶ்மிச்சடா மிஶ்ரிதேநேவ மேகவ்ரஜேந ஸ்வவக்த்ராத்மநா பூர்ண சந்த்ரேண பாஶ்சாத்ய தேஶே ஸிதை ரஜ்ஜு ஜாலைர் நிபத்தாத்மநேவ அந்தகாரேண கங்கா ஜரீஸங்க பாஜேவ ஸூர்யாத்மஜா ஸ்ரோதஸா மல்லிகா மாலிகா ஶோபிநா கேஶபாஶேந த்வம் அத்யத்புதம் க்ருஷ்ண காந்தே ப்ரஸீதேதி ஸம்ப்ரார்த்யஸே ஸாதுபி: ॥ 2 ॥

*இரண்டாவது தண்டகத்தின் நாகராக்ஷர வடிவம் :-*

अखिलजननि ! शार्ङ्गपाणिप्रिये !कीरवाणि ! प्रसर्पत् कृपाणि प्रभाबन्धुराणि व्यथा मोक्षणानि स्तुवद् रक्षणानि स्फुटानीक्षणानि प्रकामं निधेहि प्रमोदं विधेहि प्रणम्ये मयि, प्रोल्लसत् पद्मवाटीगृहे ! स्वर्ण शाटी युते ! स्वर्वधूटी करोत्क्षिप्त वीटीदलास्वाद घाटी सुशोणोष्टि ! चेटीभवद्देवकोटी शिरः स्थास्नु कोटीर जुष्टाङ्घ्रियुग्मे! प्रियोरोविहारे ! प्रकृष्टांशु हारे ! मराली प्रचारे ! महिष्टोपचारे ! कृताघ व्युदासे ! कृपागुप्त दासे ! भवद् दृष्टि लेशोऽभवच्चेत् अधीशो विशां वा दिशां वा जनो जायतेऽल्पोऽपि मूढोऽप्यहो ! कल्पवल्ली सुमानल्प माध्वी झरीकल्प भूयो भवज्जल्पभाक् कंसजित् तल्पभङ्गं गिरा कल्पयत्यन्तिके शार्ङ्गधन्वाह्वयं भासते यन्महस् तत्प्रियायां रमायां महोदारता नित्यसिद्धा द्विधाऽपीति सर्वे बुधास्त्वां रमे ! शौरि रामे ! अरविन्दालये ! मे गतिर्न त्वदन्ये सुराः सिन्धुकन्ये ! अम्ब ! लक्ष्मीन्दिरे ! मन्दिरेष्वक्षि निक्षिप्यतां न स्त्वयेत्यामन्ति प्रकामं जगन्ति प्रमोदाल्लसन्ति त्वयाऽमूनि सन्ति स्फुरच्चन्द्ररश्मिच्छटा मिश्रितेनेव मेघव्रजेन स्ववक्त्रात्मना पूर्णचन्द्रेण पाश्चात्यदेशे सितै रज्जु जालैः निबद्धात्मनेवान्धकारेण

गङ्गा झरी सङ्ग भाजेव सूर्यात्मजा स्रोतसा मल्लिका मालिका शोभिना, केशपाशेन नील प्रकाशेन संशोभिते ! हेमभाऽपि त्वं अत्यद्भुतं कृष्णकान्ते ! प्रसीदेति संप्रार्थ्यसे साधुभिः ॥ २ ॥

*1. இரண்டாவது தண்டகம் : அவதாரிகை :* இந்த தண்டகத்தில் மஹாகவி, அவருக்கே உரித்தான சொற்கோவைகளுடனும் ப்ராஸங்களுடனும் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் திவ்ய மங்கள விக்ரஹத்தின் சிறப்புகளை முந்துற முன்னம் அநுபவித்துத் தன்னைத் குளிரக் கடாக்ஷிக்க வேணுமாய்ப் ப்ரார்த்திக்கிறார். அவளது கருணைக்கு இலக்காகும்படிப் பல விளிவேற்றுமைகளால் துதிக்கிறார்.

2. ப்ரதிபத அர்த்தமும் விளக்க உறையும்

அகில ஜநநி ! அனைத்துலகுக்கும் தாயானவளே ! அகில என்னும் சொல் பல ஸந்தர்ப்பங்களில் எல்லா உலகங்களையும் குறிப்பதாக உள்ளது. ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரத்தில் ப்ரபாவ பத்ததியில் 21ம் ஶ்லோகத்தில் முதல் பாதியில் மஹாவிஷ்ணுவின் த்ரிவிக்ரமாவதார வைபவம் கூறப்பட்டுள்ளது. பலி மதந விஹாராத் வர்த்தமாநஸ்ய விஷ்ணோ: அகிலம் அதிபதத்பி: விக்ரமை: அப்ரமேய: । மஹாபலியை அடக்குதல் என்ற விளையாட்டிற்காக வளர்ந்தவரான மஹாவிஷ்ணு எல்லா உலகங்களையும் தன் அடியால் அளந்தார். அகிலம் என்ற பதத்துக்கு எல்லா லோகங்களையும் என்று ஸ்ரீமத் தேரழுந்தூர் ஆண்டவனின் வ்யாக்யானம். உத்தமூர் ஸ்வாமியும் நிகிலம் வஸ்து ஜாதம் என்று வ்யாக்யானமிட்டுள்ளார். எவ்வாறு பெருமாள் எல்லா உலகங்களையும் வ்யாபிக்கிறாரோ அவ்வாறே பிராட்டியும். ஸ்ரீ பராசர மஹர்ஷி பிராட்டியின் விபுத்வத்தை ஸ்பஷ்டமாக அருளுகிறார்.

நித்யைவேஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ ।
யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவேயம் த்விஜோத்தம ! ॥

*(ஸ்ரீ.வி.பு. 1.8.17)*

எப்போதுமிருப்பவள். ஜகத்துக்குத் தாயாய் ஸ்ரீ விஷ்ணுவுக்குத் திருவாக (ஸ்ரீ ஆக) அவரை விட்டுப் பிரியாதவளாய், விஷ்ணு எவ்வாறு ஸர்வ வ்யாபியாக இருக்கிறாரோ, அவளும் அப்படியே ஸர்வ வ்யாபினீ. ஆகவே, அகில ஜநநீ = எல்லா உலகுக்கும் தாய்.

3. ஶார்ங்கபாணி ப்ரியே ! ஶார்ங்கம் என்னும் வில்லைக் கையில் உள்ள பெருமானுக்குப் ப்ரியமானவளே ! விஷ்ணு மநோநுகூலே ! என்று போற்றப்படுபவள். அவனுடைய 'ஶார்ங்கம்' மிகப் ப்ரஸித்தி பெற்றது. ஸ்ரீ பராசரபட்டரின் பகவத் குண தர்பணம் என்னும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தந்வீ என்று பகவானின் திருநாமம் 77வது திருநாமமாக அமைகிறது. அதற்கு நிருக்தமாக (விவரணமாக) பௌருஷாநுகுணம் ஶார்ங்கம் யஸ்ய தந்வீ ஸ கத்யதே ! அவரது ஆண்மைக்குப் பொருத்தமான வில்லை உடையவர். அதனால் தந்வீ என்றழைக்கப்படுகிறார். அவரது சிறந்த வில்லின் காரணமாக மஹேஷ்வாஸ: என்றும் அழைக்கப்படுபவர்.

திருமங்கையாழ்வார் அவன் வில்லின் பெருமையில் ஆழ்ந்து போகிறார். திருநெடுந்தாண்டகம் -29ம் பாசுரத்தில் ... குன்றாத வலியரக்கர் கோனை மாளக் கொடுஞ் சிலைவாய் சரந்துரந்து குலம் களைந்து வென்றானை - இதன் பொருள் குறையாத மிடுக்கையுடை ராக்ஷஸ ராஜனான ராவணனை மாளும்படிக் கொடிய ஶார்ங்கம் மூலம் அம்புகளை ப்ரயோகித்து அவன் குலத்தை அழித்து வெற்றி பெற்றவன (ப்ரபந்தரக்ஷை) பாடவல்ல நாச்சியாரும் தாழாதே ஶார்ங்க முதைத்த ஶரமழை போல. எவ்வாறு? ஸ்ரீராமபிரானின் ஶரமழை போல'' எவ்வாறு ஸ்ரீராமபிரான் பாணவர்ஷம் = அம்புமழை பொழிந்தாரோ அவ்வாறே தாழாதே (தாமதியாமல்) மழை பொழிய வேண்டும் என்கிறாள். அவரது அம்பு மழையின் சிறப்புதான் என்ன? ஸ்ரீ வால்மீகி முனிவர் அரண்ய காண்டம் 30ம் ஸர்கத்தில் கரதூஷணாதிகளின் ஸம்ஹாரத்தைக் கூறுங்கால் அர்தாதிக முஹூர்த்தேந ராமேண நிஶிதை: ஶரை: ।

சதுர்தஶ ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம் 1-1/2 முஹூர்த்த நேரத்தில் (72 நிமிடங்களில்) 14,000 ராக்ஷஸர்களைக் கொன்றார். அந்த அம்பு மழையை நேரில் கண்ட சூர்பணகை ராவணனிடம் அதை விவரிக்கிறாள். ''அவர் அம்புகளை எடுப்பதும் அறிய முடியவில்லை. வில்லை நாணேற்றுவதும் கொடுமையான அம்புகளைத் தொடுப்பதும் தெரியவில்லை.

ஹந்யமாநம் து தத்ஸைந்யம் பஶ்யாமி ஶரவ்ருஷ்டிபி: ஆனால் அந்த அம்பு மழையால் ராக்ஷஸ ஸைந்யம் கொல்லப்படுவதை மாத்திரம் பார்த்தேன். கம்பரும் ஶார்ங்கத்தின் ஶரமழையை அற்புதமாக விவரிப்பார்.

வரிசிலை நாணில் கோத்து வாங்குதல் விடுதல் ஒன்றும்
தரிகிலா : அமரரேயும் ஆர் அவன் செய்கை தேர்வார்
பொருசினத்து அரக்கர் ஆவி போக்கிப் போக என்று
கருதவே உலகமெங்கும் ஶரங்களாய்க் காட்டும் அன்றே .

இங்கு கம்பர் கூறிய கருதவே என்பது ராமன் கூறியதே - விபீஷண ஶரணாகதி ஸந்தர்பத்தில் ராமன் கூறுவார் :

பிஶாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாம் சைவ ராக்ஷஸாந் ।
அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேஶ்வர ! ॥

''பிசாசர்கள், தாநவர்கள், யக்ஷர்கள், பூவுலகிலுள்ள ராக்ஷஸர்களையும் சுண்டு விரல் நுனியால் நான் விரும்பினால் கொல்வேன்'' என்றார். கருதவே என்பதே விரும்பினால் என்று ஆகிறது. ஸங்கல்பம் இருக்கும் பக்ஷத்தில், விரல் நுனியால் அதாவது நகத்தால் கொல்வேன் என்கிறார். ந்ருஸிம்ஹாவதாரம் ஜ்ஞாபகம் வந்ததோ?

ஸ்வாமி தேஶிகனுக்கும் ஶார்ங்கபாணியிடம் அத்யந்த பக்தி பல ஶ்லோகங்களில் காணக் கிடைக்கின்றது. ஸ்ரீ பகவத் ராமாநுஜரின் ஸ்ரீமத் கீதா பாஷ்யத்துக்குத் தாத்பர்ய சந்த்ரிகா என்னுமோர் சிறந்த வ்யாக்யானமருளும் போது த்யான ஶ்லோக ரூபமாக, நிர்விக்நமாக வ்யாக்யானம் நிறைவேற

ஶரணமுபகதாந்நஸ்த்ராயதே ஶார்ங்கதந்வா - ஶரணமடைந்த எங்களை ஸ்ரீ ஶார்ங்கபாணி காப்பாற்றுகிறார்.

ஸ்ரீ வரத விஷ்ணுகவி பிராட்டியை ஶார்ங்கபாணி ப்ரியே ! என்கிறார். ஸ்வாமி தேஶிகன் ஶார்ங்க தந்வாநுகம்பா என்று ஸ்ரீ தயாஶதகம் 106 ஶ்லோகத்தில் பரவுவார். ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரத்தில் ப்ரபாவ பத்ததியில் 15,24 ஶ்லோகங்களில் பெருமாளை ஶார்ங்கபாணியாக அநுபவிக்கிறார்.

3. கீரவாணி = கிளிமொழியாளே ! கிளி போல் மதுரமாகப் பேசுபவளே !

கிளி மதுரமாகப் பேசும் என்று கூறுவது கவிஞர் மரபு.

அகிலேஷு விஹங்கேஷு ஹந்த ! ஸ்வச்சந்தசாரிஷு ।

ஶுக ! பஞ்ஜர பந்தஸ் தே மதுராணாம் கிராம் பலம் ॥

எல்லா பக்ஷிகளும் இஷ்டம் போல் ஸஞ்சரிக்கின்றன. ஏ கிளியே ! நீ கூண்டில் அடைபட்டுள்ளாய். மதுரமான உன் பேச்சின் பலன் இதுதான்.

இன்னும் சிலர் வேத பாராயணங்களைக் கேட்டுக் கிளி வேதம் சொல்லிக் கொடுக்கிறது. ஶாஸ்த்ர விரிவுரை நிகழ்த்துகிறது என்று கூறுகின்றனர். ஆதி ஶங்கரர் மாஹிஷ்மதி நகரில் ஸ்ரீ விஶ்வ ரூபர் - பாரதி தம்பதிகளைக் காணச் சென்றார். அவர்கள் வீட்டில் நூற்றுக் கணக்கான வகுப்புகளும் வேத மோதுதலும் ஶாஸ்த்ர விமர்ஶநங்களும் நடந்தன. அங்கு கிளிகள் கூண்டில்அடைபட்டு இருந்தன. ஶங்கரோதந்தம் என்னும் நூலில் காணப்படும் ஶ்லோகம்.

பஞ்ஜரேஷு அபிதோ பத்தை:
வேதபாடன தத்பரை: ।
க்ருத ஶாஸ்த்ர ப்ரஸங்கைஶ்ச
கீரை: ஸந்நாதிதாங்கணே ॥

மஹதி ஸ்ரீமதி க்ருஹே பாடஶாலா ஶதாந்விதே

இதன் பொருள் இவ்வாறு தரப்பட்டுள்ளது. ''ஆங்காங்கு கூடுகளில் சிறையிடப்பட்டவையும் வேதம் ஓதுவிப்பதில் ஈடுபட்டவைகளும் ஶாஸ்த்ரங்களில் விரிவுரை நிகழ்த்துபவையுமான கிளிகளால் ஒலிமயமாக்கப்பட்ட தாழ்வாரங்களுடன் கூடிய நூற்றுக் கணக்கான வகுப்புகள் கொண்ட பெரிய வீடு.

ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ வரதராஜப் பஞ்சாஶத் 6ம் ஶ்லோகத்தில் கூண்டில் அடைக்கப்பட்டுப் பழக்கிவைக்கப்பட்ட கிளிகளின் மழலைச் சொற்கள் பழக்கிவைத்தவருக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கின்றன.

ஸ்தோத்ரம் மயா விரசிதம் த்வதீநவாசா
த்வத் ப்ரீதயே வரத ! யத் ததிதம் ந சித்ரம் ।
ஆவர்ஜயந்தி ஹ்ருதயம் கலு ஶிக்ஷகாணாம்
மஞ்ஜூநி பஞ்ஜரஶகுந்தவிஜல்பிதாநி ॥

ஹே வரத ! எனக்குப் பேசும் ஶக்தியை - ஸ்தோத்ரம் செய்யும் ஶக்தியை, ஜ்ஞாநத்தை நீ கொடுத்தாய். நீ கொடுத்த ஜ்ஞாநத்தைக் கொண்டு உன்னை ஸ்தோத்ரம் *(ஸ்ரீ வரதராஜ பஞ்சாஶத்)* செய்தேன். நீ மிகவும் மகிழ்கின்றாய். எவ்வாறு எனில் கூண்டிலுள்ள கிளிக்குச் சில சொற்கள் பேசக் கற்றுக் கொடுக்கின்றனர். அச்சொற்களைக் கிளி தன் மழலைச் சொற்களால் திருப்பிச் சொல்லும் போது பழக்கிவைத்தவர்கள் ஸந்தோஷமடைகின்றனர்.

கிளி என்றால் ஆசார்யர்களைக் குறிக்கும். கிளிக்கு இரண்டு பக்கங்களும் இறக்கை இருப்பது போல் ஆசார்யர்களுடைய ஜ்ஞாநத்தையும் வைராக்யத்தையும் குறிக்கும். ஶரணாகதி செய்து கொள்ள விரும்பும் சேதநன் ''உகக்கு மவை உகந்து, உகவாததனைத்து மொழிந்து, மிகத் துணிவு பெற உணர்ந்து, காவலென வரித்து, புகலில்லா தவமறியேன் அடைக்கலமாய் அடைந்தேனே என்று ஆசார்யன் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறான். ஆசார்யர்கள் சேதனனுக்கு மோக்ஷமருள வேண்டும் என்று பிராட்டியிடம் ப்ரார்த்திக்கிறார்கள். அவள் கிளி மொழியாள்.

ஆசார்யர்களுடைய ப்ரார்த்தனையைத் தன் சொற்சோடு (புருஷகார பூதையாக) எம்பெருமானிடம் ப்ரார்த்திக்கிறாள். ஸ்ரீ என்று பிராட்டியைக் குறிக்கும் சொல்லுக்குப் பல நிருக்திகள் பெரியோர்கள் கூறுவர். அவற்றுள் *ஶ்ருண்வதீம்* என்பதன் பொருள் (ஆசார்யர்களின் விண்ணப்பத்தைக்) கேட்பவள் என்பதாகும்.

4. ப்ரஸர்பத் க்ருபாணி, ப்ரபா பந்துராணி

வ்யதா மோக்ஷணானி ஸ்துவத் ரக்ஷணானி

ஸ்புடாநீக்ஷணானி ப்ரணம்ரே மயி ப்ரகாமம் நிதேஹி.

பிராட்டியின் திருக்கண்களின் மேன்மையைக் கூறுகிறார். பிராட்டியின் திருக் கண்கள் கருணை பொழிவனவாக உள்ளன. ப்ரகாஶமான அவளது கண்கள் அழகாக அகன்றுள்ளன. பிராட்டியை நமஸ்கரிப்பவர்களுடை துன்பத்தைப் போக்கி ரக்ஷிக்கின்றன. அவ்வாறான கடாக்ஷம் என்மேல் பூரணமாக விழட்டும் என்று வேண்டுகிறார்.

ப்ரஸர்பத் = பெருகுகின்ற, க்ருபாணி = கருணையை உடையவைகளும், ப்ரபா = ஒளியினால், பந்துராணி = நிரம்பியவைகளும், ஸ்துவத் = ஸ்தோத்ரம் சொல்லித் துதிப்பவர்களை, ரக்ஷணாநி = காப்பாற்றுபவைகளும், வ்யதா மோக்ஷணானி = அவர்களுடை கஷ்டங்களைப் போக்கடிப்பவைகளும், ஸ்புடாநி = அகன்ற, ஈக்ஷணானி = உன் கடாக்ஷங்களை, ப்ரணம்ரே = நமஸ்கரிப்பவனான, மயி = என்னிடம், ப்ரகாமம் = பூர்ணமாக உன் விருப்பம் போல, நிதேஹி = வைப்பாயாக.

5. ப்ரமோதம் விதேஹி ! ப்ரோல்லஸத் பத்மவாடீ க்ருஹே ! ஸ்வர்ண ஶாடீ யுதே !

ப்ரமோதம் = (எனக்கு) ஸந்தோஷத்தை, விதேஹி = கொடுப்பாயாக, ப்ரோல்லஸத் = நன்றாக மலர்ந்த, பத்ம வாடீ = தாமரைகளுள்ள பொய்கையை, க்ருஹே = இருப்பிடமாகக் கொண்டவளே ! ஸ்வர்ண = தங்கமயமான, ஶாடீயுதே =

வஸ்த்ரத்தை உடையவளே !

ஸர்வஜித் மார்கழி மீ ஸ்ரீரங்கநாத பாதுகாவில் இரண்டாவது தண்டகத்தின் நாகராக்ஷர வடிவமும் தமிழ் வடிவமும் தரப்பட்டது. மாசி மீ இதழில் இரண்டாவது தண்டகத்தின் விரிவுறையும் ப்ரதிபத அர்த்தமும் தொடங்கப் பெற்றது. அதில், முக்யமாக, பிராட்டியின் கடாக்ஷம் பூரணமாக என்மேல் விழட்டும் என்று ப்ராத்திக்கிறுர். அவளது திருக்கண்கள் கருணை பொழிவனவாக, ப்ரகாஶமாக அகன்று, அழகாக, நமஸ்கரிப்பவரின் துன்பத்தைப் போக்கி ரக்ஷிக்கின்றன என்றும் கூறப்பட்டது.

பிராட்டியின் கடாக்ஷத்தின் மஹிமையை ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ ஸ்துதியில், யஸ்யாம் யஸ்யாம் திஶி விஹரதே தேவி! த்ருஷ்டிஸ் த்வதீயா, தஸ்யாம் தஸ்யாம் அஹமஹமிகாம் தந்வதே ஸம்பதோகா: என்றுஅருளுகிறுர். ''தேவியே ! உன் கடாக்ஷம் எந்த எந்த இடத்தில் விழுகின்றதோ, அங்கெல்லாம் நான் முன்னே, நான்முன்னே என்று போட்டி போட்டுக் கொண்டு செல்வங்கள் வெள்ளமாக வந்தடைகின்றன.

ஸ்ரீமஹாலக்ஷ்மீ ஸ்தோத்ரத்தில் ஸ்ரீமந் மந்த கடாக்ஷலப்த விபவ ப்ரஹ்மேந்த்ர கங்காதராம், த்வாம் த்ரைலோக்ய குடும்பிநீம் ஸரஸிஜாம் வந்தே முகுந்தப்ரியாம்।

உன்னுடைய கடாக்ஷத்தாலே ப்ரஹ்மா, இந்த்ரன் ஶிவன் ஆகியோர் விபவத்தை அடைகிறுர்கள். இவர்களுக்கு மாத்ரம்தானா பிராட்டியின் கடாக்ஷம் (அருட்பார்வை) பெருமை சேர்க்கிறது? அந்த எம்பெருமானும் எம் பிராட்டியின் கடாக்ஷத்தை எதிர் நோக்குகின்றுன்.

கடாக்ஷ லாபாய கரோதி லோகாந் - அவளுடைய கடாக்ஷம் கிடைப்பதற்காகவே அவன் உலகங்களைப் படைக்கிறுன். ''படைக்கிறுன்'' என்னும் சொல் ''காக்கிறுன், அழிக்கிறுன்'' என்னும் இரு தொழிலுக்கும் உபலக்ஷணம். (இரு தொழிலேயும் குறிக்கும்).

*ஸ்ரீ கூரத்தாழ்வான் ஸ்ரீ ஸ்தவத்தில் (6ம் ஸ்லோகம்)*

ஜகந்நாதோऽபி நாராயணோ தந்யம் மந்யத ஈக்ஷணாத் தவ யதஸ் ஸ்வாத்மாநம் ஆத்மேஸ்வர:।

லோகநாதனாகவும் தனக்கு நாதனொருவனில்லாதபடி ஸ்வதந்த்ரனாகவும் தன்னோடொத்தார் மிக்கார் இல்லாத பரம புருஷனுமான நாராயணனும் லக்ஷ்மீ தேவியின் கடாக்ஷம் தன் மேல் விழுந்தால் தன்னைப் பெரும் பாக்யஸாலியாக நினைத்துக் கொள்கிறான். (ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவனின் ஸ்ரீ ஸ்தவ வ்யாக்யானம்).

ஸ்ரீ குணரத்ந கோஸத்தில் (ஸ்லோகம் 30) ஸ்ரீ பட்டார்யர்-

மஹாலக்ஷ்மியின் கடாக்ஷம் அவன் மீது விழுந்ததாலே அவன் பரப்ரஹ்மம் ஆனான் என இயம்புவார்.

அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத் என்பது அந்த ஸ்ரீ ஸூக்தி.

ஸ்ரீ பராஸர மஹர்ஷியும் புராணரத்நமான ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பிராட்டியின் கடாக்ஷத்தின் பெருமையை பரக்கப் பேசுகிறார். (ஸ்ரீ.வி.பு. 1.9,124,125, 130,131)

தாரா: புத்ராஸ் ததாகார ஸுஹ்ருத்தாந்ய தநாதிகம்।

பவத்யேதந் மஹாபாகே! நித்யம் த்வத்வீக்ஷணாந்ந்ருணாம் ॥24

ஏ தேவியே ! உன் அருட்பார்வையாலேயே மனிதர்களுக்கு நல்ல மனைவி, பிள்ளைகளும் பெண்களும், வீடு, நண்பர்கள், தாந்யம், தநம் ஆகிய யாவும் கிடைக்கின்றன.

*ஸ்லோகம் 125*

ஸரீராரோக்யம் ஐஸ்வர்யம் அரிபக்ஷக்ஷயம் ஸுகம்।

தேவி! த்வத் த்ருஷ்டித்ருஷ்டாநாம் புருஷாணாம் ந துர்லபம் ॥

தேவியே ! உன் கடாக்ஷம் பெற்றவருக்கு ஆரோக்யம் ஐஸ்வர்யம், எதிரிகளின் நாசம் என்ற ஸுகமெல்லாம் மிக எளிதில் கிடைக்கும்.

*ஶ்லோகம் 130, 131*

த்வயா(அ)வலோகிதா: ஸத்ய: ஶீலாத்யைஸ் ஸகலைர் குணை: ।

தநைரைஶ்வர்யைஶ்ச யுஜ்யந்தே புருஷா நிர்குணா அபி ॥

ஸ ஶ்லாக்ய: ஸ குணீ தந்ய: ஸ குலீந: ஸ புத்திமாந் ।

ஸ ஶூர: ஸ ச விக்ராந்த: யம் த்வம் தேவி ! நிரீக்ஷஸே ॥

பிராட்டியின் கருணை கடாக்ஷத்துக்கு இலக்கானவன் எத்துணை குணமற்றவனானாலும் அவன் நற்பண்புகள் - நல்ல - குணங்கள், எல்லோராலும் கொண்டாடப்படுபவன், நல்ல குலம், புத்திமான், சூரன் என்னும் பல சிறப்புக்களைப் பெறுகிறான்.

*(மேலே கூறப்பட்ட ஸ்ரீ விஷ்ணுபுராண ஶ்லோகங்கள் ஸ்ரீ விஷ்ணு சித்தர் என்னும் எங்களாழ்வான், ஸ்ரீதர ஸம்யமி ஆகியோரால் வ்யாக்யாநம் செய்யப்பட்டதாயும் புராதனமான க்ரந்தாக்ஷர ஸ்ரீ விஷ்ணு புராணத்திலிருந்து எடுக்கப்பட்டது. டெல்ஹி, கோரக்பூர் பதிப்புகளில் பாடபேதம் காணப்படுகிறது.)*

ஸ்ரீ ஆளவந்தாரும் ஸ்தோத்ர ரத்நத்தில் *(ஶ்லோகம் 37)* பிராட்டியின் கடாக்ஷத்தைப் பரவுகிறார்-

ஜகத் ஸமஸ்தம் யதபாங்க ஸம்ஶ்ரயம்

''எல்லா உலகமும் எந்த லக்ஷ்மியின் கடாக்ஷத்தை ஆதாரமாகவுடையதோ...''

இவ்வண்ணமான சிறந்த கடாக்ஷம் என்மேல் விழுவதாக என்று கவிஶ்ரேஷ்டர் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை வேண்டுகிறார். தாமரைப் பொய்கையில் வஸிப்பவளே ! தங்கமயமான வஸ்த்ரத்தை உடையவளே ! என்று விளி வேற்றுமைகளையும் பார்த்தோம்.

தண்டகத்தின் அடுத்த பகுதிகளை இப்போழ்து காண்போம்:-

ஸ்வர்வதூடீ கரோக்ஷிப்த வீடீதல்லாஸ்வாத தாடீ ஸமாப்ோஶோணேஷ்டி !

தேவஸ்த்ரீகள் பிராட்டிக்குப் பணிவிடை செய்கின்றனர். அவர்கள் நல்ல கொழுந்து வெற்றிலைகளை உரிய முறையில் தயாரித்துப் பிராட்டிக்கு ஸமர்ப்பிக்கின்றனர். அதை அமுது செய்ததால் பிராட்டியின் திருவதரங்கள் அழகாக நன்ருகச் சிவந்து காண்கின்றன. பிராட்டியின் திருவதரங்கள் இயற்கையிலேயே கோவைப்பழம் போல் சிவந்தவை. ப்ரஹ்மபுராணத்திலுள்ள ஸ்ரீ லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமத்தில் (நாமாவளியில் 380ம் திருநாமம்) பிம்பாதரா என்று சிறப்பிக்கப்படுகிருள். வெற்றிலையை அமுது செய்வதால் மேலும்சிறப்பாகச் சிவந்து உள்ளன.

ஸ்வர்வதூடீ - தேவமாதர்களுடைய

கரோக்ஷிப்த - கைகளால் எடுத்து ஸமர்ப்பிக்கப்பட்ட

வீடீதல - கொழுந்து வெற்றிலைகளை

ஆஸ்வாத தாடீ - அமுது செய்த காரணத்தால்

ஸு்ஷோணா - அழகாகச் சிவந்த

ஓஷ்டி - திருவதரங்களையுடையவளே!

சேடீபவத் தேவகோடீ ஶிரஸ்தாஸ்நு கோடீர ஜுஷ்டாங்க்ரியுக்மே!

சேடீபவத் - (உனக்கு) பணியாளிகளான (வேலைக்காரிகளான)

தேவகோடீ - தேவர் இனத்தைச் சேர்ந்தவர்களுடைய

ஶிரஸ்தாஸ்நு - தலையிலுள்ள

கோடீர - கிரீடங்களால்

ஜுஷ்ட - அடையப்பட்ட (நமஸ்கரிக்கப்பட்ட)

அங்க்ரியுக்மே - இரண்டு திருவடிகளையுடையவளே!

ஸ்ரீ யாமுநார்யர் ஸ்ரீ சதுஶ்லோகீயில்

ப்ரஹ்மேஶாதி ஸுரவ்ரஜஸ்ஸதயித: த்வத் தாஸ தாஸீகண:

"தங்கள்தங்கள் பத்னீகளோடு ப்ரஹ்மா, ஶிவன் முதலிய தேவக் கூட்டம் உனக்கு வேலைக்காரர்களாகவும் வேலைக்காரிகளாகவும்

உள்ளனர். அவ்வாறுன தேவஸ்த்ரீகள் கிரீடமணிந்தவாறே பிராட்டியின் திருவடிகளில் ஸேவிக்கின்றனர்.

இரண்டாவது தண்டகத்தின் அநுபவம் தொடர்கிறது. பல விளிவேற்றுமைகள் மூலமாகக் கவி ஸ்ரேஷ்டர் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் ஸௌந்தர்யத்தைப் பரவுகிறுர்–

1. மராலீ ப்ரஸாரே ! பெண் அன்னத்தின் நடையழகை ஒத்த நடையழகுடையவளே !

பெண்களின் நடையழகை அன்னத்தின் நடையழகோடு ஒப்பிடுவது கவிஞர் மரபு.

ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தில் ஸரஸ்வதீ தேவியை ''அன்ன நடையாள்'' ''அன்ன அரசேறி வருவாள்'' என்கிறுர்.

2. கவிஞர் மரபுக்கு மாறுகத் திருமங்கை மன்னனின் சொல்லோவியம் சிறப்பு மிக்கது. திருநறையூர் பெருமானிடம் ஆராக் காதல் கொண்டவர். நூறு பாசுரங்கள் இயற்றிப் பெருமாளைத் துதிக்கிறுர். பெரிய திருமொழி (6.5.5)ல் திருநரையூர் பெண்களின் நடையழகைக் கண்டு வெட்கப்பட்டுக் கொண்டு அன்னங்கள் மறைந்து கொள்கின்றன என்கிறுர்.

பெடையோடன்னம்பெய்வளையார்தம்பின்சென்று
நடையோடு இயலி நாணி ஒளிக்கும் நறையூரே

பெய்வளையார் தம் பின் = வளைகளைக் கையில் நிறையப் பெற்ற பெண் மணிகளுக்குப் பின்னே,

பெடையோடு அன்னம் = பெண்ணும் ஆணுமான அன்னங்கள்

நடையோடு சென்று = நடந்து போய்

இயலி = ஈடுபட்டு

நாணி = அவர்களைப் போல் நடக்கமாட்டாமே வெள்கி

ஒளிக்கும் நறையூரே = மறையுமிடமான நறையூரே.

*(ப்ரபந்த ரக்ஷை)*

3. பெடையோடு அன்னம் பெய்வளையார் தம் பின் சென்று

நடையோடு இயலி நாணி ஒளிக்கும் நறையூரே

இந்தப் பாசுரத்தின் மேலே உள்ள இரண்டு வரிகளுக்கும் ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன்; அந்த ஆண்டவனுக்கே உரிய ஹாஸ்யம் இழையோடும் ஓர் அபூர்வமான அர்த்த விஷயத்தை ஸாதித்தாகிறது.

ஸ்வாமியின் வ்யாக்யானம் :

சித்ரகூட பர்வதத்தில் ஸீதையோட பெருமாள் ஏகாந்தமாக மந்தாகினீ நதிக் கரையில் உலாத்திண்டு வரார். அப்படி போயிண்டே இருக்கச்சே ராமன் அப்படி சிரிச்சாராம். ஸீதை அவளும் சிரிச்சாளாம். அவாளும் சிரிப்பா இவாளும் சிரிப்பா. சிரிக்கறதுக்கெல்லாம் காரணமா கேழ்க முடியும்?

அஸ்மிந் மயா ஸார்த்தம் உதார ஶீலா,

ஶிலாதலே பூர்வம் உபோபவிஷ்டா *(3.63.12)*

ரெண்டு பேரும் வந்து உட்கார்ந்தா. அருகில் நதி ஜலம் ஓடறது. ஸீதை கேழ்க்கறு ! நீங்க சிரிச்சேளே ! எதுக்காக?ன்னு. ராமன் சொல்றார் - நாம் வரச்சே ஹம்ஸம் எதிர்க்க வந்தது. ரொம்ப அழகாக நடந்து வந்தது.

அன்ன வடிவாள் அசையும் நடையாள்

உயரும் அன்னவரசு ஏறி வருவாள்

(மெய்விரத மான்மியம் - ஸ்வாமி தேஶிகன்).

ஸ்த்ரீகளைச் சொல்றது. அவா நடை ஹம்ஸ கதியாட்டமாம். ராமன் சொல்றார் - அவ்வளவு ஆச்சர்யமான ஹம்ஸம் வந்தது. நான் அதை கவனிச்சுண்டே இருந்தேன். உன்னையே உத்துப் பார்த்தது. உடனே திரும்பிப் போய் ஜலத்துல இறங்கி தாமரை இலைல தலைய மறச்சு வெச்சிண்டு அப்படியே ஒளிஞ்சுண்டுடுத்து. அன்னண்டை நாம் போனவுடனே

மறுபடியும் ஏந்து வந்துடுத்து. அதுக்காக சிரிச்சேன்னுர். அதுக்காக சிரிப்பானேன்னு ஸீதை. அது உன் நடையைப் பார்த்தது. உன் நடை அதனுடைய நடையைவிட அழகாக இருந்தது. நீ போனப்பறம் வெளிலே வருவோம்னு. ஸ்த்ரீகள் நடையை நம் நடைக்கு ஒப்பிடருளேன்னு வெட்கத்தால் உள்ளேபோய் ஒளிஞ்சுண்டுடுத்து. நம் பார்யைக்கு அவ்வளவு உசந்த நடைன்னு ஸந்தோஷப்பட்டு எனக்கு சிரிப்பு வந்தது. அந்த ஹம்ஸம் ஒளிஞ்சண்டதைப் பார்த்து சிரிச்சேன்னுர். (ஆசார்ய ராமாம்ருதம்).

4. மஹிஷ்டோபசாரே ! மிக மிகச் சிறந்த உபசார பூர்வகமான பூஜையை உடையவளே !

எம்பெருமானை விட்டுப் பிரியாதவள். அவன் வல மார்பில் என்றும் உள்ளவள். அவன் ஷோடபோபசாரம் (16 வித உபசாரம்) பெறுகிறுன். அப்போதே பிராட்டியும் எல்லாவித உபசாரங்களைப் பெறுகிறுள். அதனுல் மஹிஷ்டோபசாரே என்று துதிக்கப்படுகிறுள்.

5. க்ருதாக வ்யுதாஸே ! (உன்னை ஆஶ்ரயித்தவர்களின்) பாபங்களைப் போக்கடிப்பவளே !

6. க்ருபா குப்த தாஸே ! = தன் (அவ்யாஜ கருணையால்) அடியார்களைக் காப்பவளே !

7. பவத்த்ருஷ்டி லேஶோऽ பவச்சேத் அதீஶோ

விஶாம் வா திஶாம் வா ஜநோ ஜாயதேऽல்போऽபி

தாயே ! உன் கடாக்ஷத்தின் லவலேஶம் யார் மீது விழுகிறதோ - அவன் அல்பனாக இருந்தாலும்— அவன் மக்கள் தலைவனாக - அரசனாக அல்லது திக்பாலகனுகவாவது ஆகிறுன்.

பவத் = உன்னுடைய

த்ருஷ்டிலேஶ: = அருட்பார்வையின் மிகச் சிறியதாவது

அபவத் சேத் = கிடைக்குமாகில்

அல்பஜ்ஞ: அபி = அல்பனான மனிதன் கூட

விஶாம் அதீஶ: = மக்களின் தலைவனாக, அரசனாக

வா = அல்லது

திஶாம் அதீஶ: = திக்பாலகனாக

ஜாயதே = ஆகிறான்.

8. பிராட்டியின் கருணாகடாக்ஷம் பெறுபவன் எத்தனை மேன்மை பெறுகிறான் என்பதை மேலும் கூறுகிறார். அறிவிலியாக இருப்பவன் கூட, பிராட்டியின் அருட் பார்வை பெற்றால் சிறப்பான வாக்வன்மை பெறுகிறான். தேவலோகத்தில் கற்பக வ்ருக்ஷம் உள்ளது. அந்தக் கற்பக வ்ருக்ஷத்தில் கற்பகக் கொடிகள் உள்ளன. அந்தக் கொடிகளிலுள்ள மலர்களிருந்து தேன் ப்ரவாஹமாக வருகிறது. அந்தத் தேன் போல் இனிமையாகவும் ப்ரவாஹமாகவும் அவன் வாக்கு வன்மை அடைகிறான். என்னே பிராட்டியின் கடாக்ஷத்தின் பெருமை ! இவ்வாறு சொல்வளம் பெற்றவன் ஆயிரம் நாவுடைய ஆதிஶேஷனையும் தோல்வி அடையச் செய்கிறது.

9. ஆதிஶேஷனுடைய பெருமை யாராலும் கூற இயலாது. பராசர மஹர்ஷி, ஸ்ரீ விஷ்ணு புராணம், இரண்டாம் அம்ஶம் ஐந்தாமத்யாயத்தில் ஆதிஶேஷனைப் பற்றிக் கூறுகிறார்—

தஸ்ய வீர்யம் ப்ரபாவஶ்ச ஸ்வரூபம் ரூபமேவ ச।

ந ஹி வர்ணயிதும் ஶக்யம் ஜ்ஞாதும் ச த்ரிதஶைரபி॥

(ஸ்ரீ.வி.பு. 2.5.21)

''அவருடைய வீர்யம், ப்ரபாவம், ஸ்வரூபம், ரூபம் ஆகிய இவைகளைத் தேவர்களும் அறியமாட்டார்கள். அவர் எம்பெருமானுக்கு

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள் கடலுள் - என்றும்

புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு. *(முதல் திருவந்தாதி-53)*

ஸ்ரீ விஷ்ணு புராணத்தின் இரண்டாம் அம்ஸத்தின் ஐந்தாம் அத்யாயத்தில் ஸ்லோகம் 13 முதல் 27 வரை ஆதிஸேஷனைப் பற்றிப் பல பெருமைகள் காணக்கிடைக்கின்றன. பாதாள லோகங்களுக்குக் கீழே ஆதிஸேஷன் எழுந்தருளியிருக்கிறார். ஸம்ஹாரத்துக்குக் காரணமான, தமோ குணத்திற்கு ஆஸ்ரயமான ஸ்ரீ விஷ்ணுவின் ஸரீரமாக இருக்கிறார். பல ஆபரணங்களும் அணிந்து பட்டாடையுடன் விளங்குகிறார். கைகளில் கலப்பையும், உலக்கையும் தாங்குகிறார். இரு புறங்களிலும் காந்திதேவியாலும் வாருணீ தேவியாலும் உபாஸிக்கப்படுகிறார். ஆயிரம் தலைகளையுடைய அவர் கல்பகாலத்தின் முடிவில் தன்னுடைய விஷமயமான அக்னி ஜ்வாலையுடன் கூடிய முகத்திலிருந்து ஸங்கர்ஷணனால் உருவம் பெற்ற ருத்ரனை உண்டாக்குகிறார். அந்த ருத்ரன் ப்ரளய காலத்தில் மூவுலகையும் அழிக்கிறான்.

யம் ஆராத்ய புராணர்ஷி: கர்க: ஜ்யோதீம்ஷி தத்வத:।

ஜ்ஞாதவாந் ஸகலம் சைவ நிமித்தபடிதம் பலம்॥ *(2.5.26)*

ஸ்ரீ ஆதிஸேஷனை ஆராதித்து அவரிடமிருந்து க்ரஹங்கள், நக்ஷத்ரங்களைப் பற்றி ஸாஸ்த்ரத்தையும் சகுனம், நிமித்தம் இவைகளைப் பற்றியும் அறிந்தார் கர்க மஹர்ஷி.

*10.* ஸ்வாமி தேஸிகன், ஆதிஸேஷன் ஜ்யோதிஷஸித்தாந்த ப்ரவர்த்தகன் என்று கூறுவதாக அமைந்த ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ர வைதாளிக பத்ததியின் நான்காம் ஸ்லோகம்—

உபநமதி முஹூர்த்தம் ஸேஷஸித்தாந்த ஸித்தம்
ததிஹ சரண ரக்ஷா ரங்கநாத! த்வயைஷா।

ம்ருதுபதம் அதிருடா மஞ்ஜுஶிஞ்ஜிதை: ஸ்வை:
உபதிஶது ஜநாநாம் உத்ஸவாரம்பவார்தாம் ॥

இதன் திரண்ட பொருள் :- ஹே ரங்கநாதனே ! ஆதிஶேஷனால் ப்ரவர்த்திக்கப்பட்ட ஜ்யோதிஷ ஸித்தாந்தத்தில் கூறியபடி, ப்ரயாணத்திற்கு உகந்த வேளை வந்துள்ளது. அதை அறிவித்து வைதாளிகர்கள் வேண்டுகின்றனர். பாதுகைகளை ம்ருதுவாகத் திருவடியில் சாத்திக் கொண்டு புறப்பட வேண்டும். பாதுகைகளின் இனிய ஒலியைக் கேட்டு பகவானை ஸேவிக்க ஜனங்கள் வருவார்கள்.

ஐந்து வித சோதிட ஸித்தாந்தத்திற்கு ஆதிஶேஷன் ப்ரவர்த்தகன். (ஸ்ரீ.உ.வே. உத்தமூர் ஸ்வாமி வ்யாக்யாநம்) வைதாளிகா: போதகரா: உரிய (காலங்களை)க் கூறுபவர்கள் 10 ஶ்லோகங்கள் கொண்ட வைதாளிக பத்ததியில் முதல் ஶ்லோகமும் கடைசி ஶ்லோகமும் பாதுகே! என்ற விளிவேற்றுமை பெறுகிறது. மற்ற 8 ஶ்லோகங்களும் ஸ்ரீ ரங்கநாதனை அழைப்பதாக அமைந்துள்ளன. ஸ்ரீ வஸிஷ்டர் தஶரத குமாரர்களுக்கு நாமகரணம் செய்தார். ஆதிசேஷனின் சிஷ்யரான கர்க மஹர்ஷி ஸ்ரீ பலராமனுக்கும் ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் கம்ஸனிடமிருந்து ஆபத்து வருமோ என்று பயந்து

அலக்ஷிதோऽஸ்மின் ரஹஸி மாமகைரபி கோவ்ரஜே ।

என் மக்களுக்குக் கூடத் தெரியாதபடி ரஹஸ்யமாக இந்த மாடுகள் உள்ள இடத்தில் நாமகரணம் செய்வீராக என்று கர்கரை வேண்டினார்.

ஏவம் ஸம்ப்ரார்திதோ விப்ர: ஸ்வசிகீர்ஷிதமேவ தத் ।

சகார நாமகரணம் கூடோ ரஹஸி பாலயோ: ॥

இவ்வாறு ப்ரார்த்திக்கப்பட்ட கர்கர் அதுவேதான் தன் விருப்பமென்று ரஹஸ்யமாக இரண்டு சிறுவர்களுக்கும் நாமகரணம் செய்தார். (ஸ்ரீமத் பாகவதம் 10.8–10.11)

இத்துணை பெருமை பெற்ற ஆதிசேஷனைவிட அதிக வாக்குவன்மை பெற்றவன் பிராட்டியின் கடாக்ஷத்துக்கு இலக்கானவன்.

இவற்றைக் கூறும் தண்டகத்தின் பகுதி இதோ-

கல்பவல்லீ ஸுமாநல்ப மாத்வீ ஜரீ கல்ப பூயோ

பவஜ்ஜல்ப பாக் கம்ஸஜித் தல்ப பங்கம் கிரா கல்பயதி, மூடோப்யஹோ!

அஹோ! = ஆஶ்சர்யம்

மூட: அபி = அறிவிலியாக இருந்தாலும்

கல்ப வல்லீ = கற்பகக் கொடியின்

ஸும அநல்ப மாத்வீ = ஏராளமான புஷ்பங்களுடைய தேனின்

ஜரீ கல்ப = வெள்ளம் போல

பூயோऽ பவத் = மேன்மேலும் உண்டாகிற

ஜல்ப பாக் = வாக்கு வன்மையுடையவனை

கிரா = வாக்கினால்

கம்ஸஜித் = கம்ஸனை ஜயித்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய

தல்ப - படுக்கையான ஆதிஶேஷனுக்கு

பங்கம் = தோல்வியை

கல்பயதி = செய்கிறான்.

பிராட்டியின் கடாக்ஷத்தின் மஹிமை சென்ற இதழிலேயே, ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் இந்த்ரனால் செய்யப்பட்ட மஹாலக்ஷ்மீ ஸ்தோத்திரத்திலிருந்து பல ஶ்லோகங்கள் உதாஹரிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ ஆழ்வானின் ஸ்ரீஸ்தவத்தின் கடைசி இரண்டு ஶ்லோகங்களை அநுஸந்தித்துத் தலைக்கட்டுவோம்–

யஸ்யா: கடாக்ஷம்ருது வீக்ஷண தீக்ஷிதேந
ஸத்யஸ் ஸமுல்லஸிதபல்லவ முல்லலாஸ।
விஸ்வம் விபர்யய ஸமுத்த விபர்யயம் ப்ராக்
தாம் தேவதேவ மஹிஷீம் ஸ்ரியமாஸ்ரயாம:॥

ப்ரளய காலத்தில் ஸகல ஜீவ வர்கமும் பகவானிடம் லயம் அடைந்துள்ளது. இந்த ஸ்லோகத்தின் தாத்பர்யத்தை மஹாவித்வான் காஞ்சி அண்ணங்கராசார்யர் ஸ்வாமி அருளுகிறுர் - ''ஒரு ப்ரவ்ருத்திக்கும் யோக்ய மன்றியே துவண்டு அஸத் கல்பமாய் கிடக்கையில் ''இவ்வாத்ம வர்கத்தை ப்ரவ்ருத்தி க்ஷமமாக வேணும் என்று திருவுள்ளம் பற்று நின்ற யாவளொரு பிராட்டி அவ்வாத்ம வர்கத்தை நோக்கிக் குளிரக் கடாக்ஷிக்க முயன்றவளவிலே, அனைத்தும் துவட்சி நீங்கித் தளிரும் முறியுமாய்ப் பசுகு பசுகென்று விளங்குமே, அந்தப் பிராட்டியை சரணமடைகிறேன் என்கிறுர். அதுபோலே அஸத் கல்பனாய் கிடக்கும் அடியேனையும் குளிர நோக்கி ஸத்கோஷ்டியிலே அந்வயிப்பிக்க வேணும் என்னும் ப்ரார்த்தனை இதில் உள்ளுறை.''

ஸ்லோகம் 11.

யஸ்யா: கடாக்ஷவீக்ஷாக்ஷண லக்ஷம் லக்ஷிதா மஹேஸாஸ்யு:
ஸ்ரீ ரங்கராஜமஹிஷீ ஸா மாமபி வீக்ஷதாம் லக்ஷ்மீ:॥

பிராட்டியின் கடாக்ஷ வீக்ஷணத்திற்கு க்ஷண காலம் பாத்திரமானவர்கள் பாக்கியவான்களாகிறுர். அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாயகித்தாயார் அடியேனைக் கடாக்ஷிக்க வேணும்.

இரண்டாவது தண்டகத்தின் அநுபவம் தொடர்கிறது. பல விளிவேற்றுமைகள் மூலமாகக் கவி ஸ்ரேஷ்டர் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் ஸௌந்தர்யத்தைப் பரவுகிறுர்–

1. மராலீ ப்ரஸாரே ! பெண் அன்னத்தின் நடையழகை ஒத்த நடையழகுடையவளே !

பெண்களின் நடையழகை அன்னத்தின் நடையழகோடு ஒப்பிடுவது கவிஞர் மரபு.

ஸ்வாமி தேசிகன் ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தில் ஸரஸ்வதி தேவியை ''அன்ன நடையாள்'' ''அன்ன அரசேறி வருவாள்'' என்கிறார்.

2. கவிஞர் மரபுக்கு மாறாகத் திருமங்கை மன்னனின் சொல்லோவியம் சிறப்பு மிக்கது. திருநறையூர் பெருமானிடம் ஆராக் காதல் கொண்டவர். நூறு பாசுரங்கள் இயற்றிப் பெருமாளைத் துதிக்கிறார். பெரிய திருமொழி (6.5.5)ல் திருநறையூர் பெண்களின் நடையழகைக் கண்டு வெட்கப்பட்டுக் கொண்டு அன்னங்கள் மறைந்து கொள்கின்றன என்கிறார்.

பெடையோடன்னம்பெய்வளையார்தம்பின்சென்று

நடையோடு இயலி நாணி ஒளிக்கும் நறையூரே

பெய்வளையார் தம் பின் = வளைகளைக் கையில் நிறையப் பெற்ற பெண் மணிகளுக்குப் பின்னே,

பெடையோடு அன்னம் = பெண்ணும் ஆணுமான அன்னங்கள்

நடையோடு சென்று = நடந்து போய்

இயலி = ஈடுபட்டு

நாணி = அவர்களைப் போல் நடக்கமாட்டாமே வெள்கி

ஒளிக்கும் நறையூரே = மறையுமிடமான நறையூரே.

(ப்ரபந்த ரக்ஷை)

3. பெடையோ இடு அன்னம் பெய்வளையார் தம் பின் சென்று

நடையோடு இயலி நாணி ஒளிக்கும் நறையூரே.

இந்தப் பாசுரத்தின் மேலே உள்ள இரண்டு வரிகளுக்கும் ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன்; அந்த

ஆண்டவனுக்கே உரிய ஹாஸ்யம் இழையோடும் ஓர் அபூர்வமான அர்த்த விஷயத்தை ஸாதித்தாகிறது.

ஸ்வாமியின் வ்யாக்யானம் :

சித்ரகூட பர்வதத்தில் ஸீதையோட பெருமாள் ஏகாந்தமாக மந்தாகிநீ நதிக் கரையில் உலாத்திண்டு வரார். அப்படி போயிண்டே இருக்கச்சே ராமன் அப்படி சிரிச்சாராம். ஸீதை அவளும் சிரிச்சாளாம். அவாளும் சிரிப்பா இவாளும் சிரிப்பா. சிரிக்கறதுக்கெல்லாம் காரணமா கேழ்க முடியும்?

அஸ்மிந் மயா ஸார்த்தம் உதார ஸீலா,

ஸிலாதலே பூர்வம் உபோபவிஷ்டா *(3.63.12)*

ரெண்டு பேரும் வந்து உட்கார்ந்தா. அருகில் நதீ ஜலம் ஓடறது. ஸீதை கேழ்க்கறு ! நீங்க சிரிச்சேளே ! எதுக்காக?ன்னு. ராமன் சொல்றுர் - நாம் வரச்சே ஹம்ஸம் எதிர்க்க வந்தது. ரொம்ப அழகாக நடந்து வந்தது.

அன்ன வடிவாள் அசையும் நடையாள்

உயரும் அன்னவரசு ஏறி வருவாள்

(மெய்விரத மான்மியம் - ஸ்வாமி தேஸிகன்).

ஸ்த்ரீகளைச் சொல்றது. அவா நடை ஹம்ஸ கதியாட்டமாம். ராமன் சொல்றுர் - அவ்வளவு ஆச்சர்யமான ஹம்ஸம் வந்தது. நான் அதை கவனிச்சுண்டே இருந்தேன். உன்னையே உத்துப் பார்த்தது. உடனே திரும்பிப் போய் ஜலத்துல இறங்கி தாமரை இலைல தலைய மறச்சு வெச்சிண்டு அப்படியே ஒளிஞ்சுண்டுடுத்து. அன்னண்டை நாம் போனவுடனே மறுபடியும் ஏந்து வந்துடுத்து. அதுக்காக சிரிச்சேன்னுர். அதுக்காக சிரிப்பானேன்னு ஸீதை. அது உன் நடையைப் பார்த்தது. உன் நடை அதனுடைய நடையைவிட அழகாக இருந்தது. நீ போனப்பறம் வெளிலே வருவோம்னு. ஸ்த்ரீகள் நடையை நம்

நடைக்கு ஒப்பிடறுளேன்னு வெட்கத்தால் உள்ளேபோய் ஒளிஞ்சுண்டுடுத்து. நம் பார்வைக்கு அவ்வளவு உசந்த நடைன்னு ஸந்தோஷப்பட்டு எனக்கு சிரிப்பு வந்தது. அந்த ஹம்ஸம் ஒளிஞ்சண்டதைப் பார்த்து சிரிச்சேன்னுர். (ஆசார்ய ராமாம்ருதம்).

4. மஹிஷ்டோபசாரே ! மிக மிகச் சிறந்த உபசார பூர்வகமான பூஜையை உடையவளே !

எம்பெருமானை விட்டுப் பிரியாதவள். அவன் வல மார்பில் என்றும் உள்ளவள். அவன் ஷோடஶோபசாரம் (16 வித உபசாரம்) பெறுகிறுன். அப்போதே பிராட்டியும் எல்லாவித உபசாரங்களைப் பெறுகிறுள். அதனுல் மஹிஷ்டோபசாரே என்று துதிக்கப்படுகிறுள்.

5. க்ருதாக வ்யுதாஸே ! (உன்னை ஆஶ்ரயித்தவர்களின்) பாபங்களைப் போக்கடிப்பவளே !

6. க்ருபா குப்த தாஸே ! = தன் (அவ்யாஜ கருணையால்) அடியார்களைக் காப்பவளே !

7. பவத்த்ருஷ்டி லேஶோऽ பவச்சேத் அதீஶோ

விஶாம் வா திஶாம் வா ஜ்நோ ஜாயதேऽல்போऽபி

தாயே ! உன் கடாக்ஷத்தின் லவலேஶம் யார் மீது விழுகிறதோ - அவன் அல்பனாக இருந்தாலும்— அவன் மக்கள் தலைவனாக - அரசனாக அல்லது திக்பாலகனுகவாவது ஆகிறுன்.

பவத் = உன்னுடைய

த்ருஷ்டிலேஶ: = அருட்பார்வையின் மிகச் சிறியதாவது

அபவத் சேத் = கிடைக்குமாகில்

அல்பஜ்ந: அபி = அல்பனான மனிதன் கூட

விஶாம் அதீஶ: = மக்களின் தலைவனாக, அரசனாக

வா = அல்லது

திஶாம் அதீஶ: = திக்பாலகனாக

ஜாயதே = ஆகிறான்.

8. பிராட்டியின் கருணாகடாக்ஷம் பெறுபவன் எத்தனை மேன்மை பெறுகிறான் என்பதை மேலும் கூறுகிறார். அறிவிலியாக இருப்பவன் கூட, பிராட்டியின் அருட் பார்வை பெற்றால் சிறப்பான வாக்வன்மை பெறுகிறான். தேவலோகத்தில் கற்பக வ்ருக்ஷம் உள்ளது. அந்தக் கற்பக வ்ருக்ஷத்தில் கற்பகக் கொடிகள் உள்ளன. அந்தக் கொடிகளிலுள்ள மலர்களிருந்து தேன் ப்ரவாஹமாக வருகிறது. அந்தத் தேன் போல் இனிமையாகவும் ப்ரவாஹமாகவும் அவன் வாக்கு வன்மை அடைகிறான். என்னே பிராட்டியின் கடாக்ஷத்தின் பெருமை ! இவ்வாறு சொல்வளம் பெற்றவன் ஆயிரம் நாவுடைய ஆதிஶேஷனையும் தோல்வி அடையச் செய்கிறது.

9. ஆதிஶேஷனுடைய பெருமை யாராலும் கூற இயலாது. பராசர மஹர்ஷி, ஸ்ரீ விஷ்ணு புராணம், இரண்டாம் அம்ஶம் ஐந்தாமத்யாயத்தில் ஆதிஶேஷனைப் பற்றிக் கூறுகிறார்—

தஸ்ய வீர்யம் ப்ரபாவஶ்ச ஸ்வரூபம் ரூபமேவ ச।

ந ஹி வர்ணயிதும் ஶக்யம் ஜ்ஞாதும் ச த்ரிதஶைரபி॥

(ஸ்ரீ.வி.பு. 2.5.21)

''அவருடைய வீர்யம், ப்ரபாவம், ஸ்வரூபம், ரூபம் ஆகிய இவைகளைத் தேவர்களும் அறியமாட்டார்கள். அவர் எம்பெருமானுக்கு

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்

நின்றால் மரவடியாம் நீள் கடலுள் - என்றும்

புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்

அணையாம் திருமாற்கு அரவு. *(முதல் திருவந்தாதி-53)*

ஸ்ரீ விஷ்ணு புராணத்தின் இரண்டாம் அம்சத்தின் ஐந்தாம் அத்யாயத்தில் ஸ்லோகம் 13 முதல் 27 வரை ஆதிசேஷனைப் பற்றிப் பல பெருமைகள் காணக்கிடைக்கின்றன. பாதாள லோகங்களுக்குக் கீழே ஆதிசேஷன் எழுந்தருளியிருக்கிறார். ஸம்ஹாரத்துக்குக் காரணமான, தமோ குணத்திற்கு ஆஶ்ரயமான ஸ்ரீ விஷ்ணுவின் ஶரீரமாக இருக்கிறார். பல ஆபரணங்களும் அணிந்து பட்டாடையுடன் விளங்குகிறார். கைகளில் கலப்பையும், உலக்கையும் தாங்குகிறார். இரு புறங்களிலும் காந்திதேவியாலும் வாருணீ தேவியாலும் உபாஸிக்கப்படுகிறார். ஆயிரம் தலைகளையுடைய அவர் கல்பகாலத்தின் முடிவில் தன்னுடைய விஷமயமான அக்னி ஜ்வாலையுடன் கூடிய முகத்திலிருந்து ஸங்கர்ஷணனால் உருவம் பெற்ற ருத்ரனை உண்டாக்குகிறார். அந்த ருத்ரன் ப்ரளய காலத்தில் மூவுலகையும் அழிக்கிறான்.

யம் ஆராத்ய புராணர்ஷி: கர்க: ஜ்யோதீம்ஷி தத்வத: ।

ஞாதவாந் ஸகலம் சைவ நிமித்தபடிதம் பலம் ॥ *(2.5.26)*

ஸ்ரீ ஆதிசேஷனை ஆராதித்து அவரிடமிருந்து க்ரஹங்கள், நக்ஷத்ரங்களைப் பற்றி ஶாஸ்த்ரத்தையும் சகுனம், நிமித்தம் இவைகளைப் பற்றியும் அறிந்தார் கர்க மஹர்ஷி.

10. ஸ்வாமி தேசிகன், ஆதிசேஷன் ஜ்யோதிஷஸித்தாந்த ப்ரவர்த்தகன் என்று கூறுவதாக அமைந்த ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ர வைதாளிக பத்ததியின் நான்காம் ஸ்லோகம்—

உபநமதி முஹூர்த்தம் சேஷஸித்தாந்த ஸித்தம்
ததிஹ சரண ரக்ஷா ரங்கநாத ! த்வயைஷா ।
ம்ருதுபதம் அதிருடா மஞ்ஜுஶிஞ்ஜிதை: ஸ்வை:
உபதிஶது ஜநாநாம் உத்ஸவாரம்ப வார்தாம் ॥

இதன் திரண்ட பொருள் :- ஹே ரங்கநாதனே ! ஆதிசேஷனால் ப்ரவர்த்திக்கப்பட்ட ஜ்யோதிஷ

ஸித்தாந்தத்தில் கூறியபடி, ப்ரயாணத்திற்கு உகந்த வேளை வந்துள்ளது. அதை அறிவித்து வைதாளிகர்கள் வேண்டுகின்றனர். பாதுகைகளை ம்ருதுவாகத் திருவடியில் சாத்திக் கொண்டு புறப்பட வேண்டும். பாதுகைகளின் இனிய ஒலியைக் கேட்டு பகவானை ஸேவிக்க ஜனங்கள் வருவார்கள்.

ஐந்து வித சோதிட ஸித்தாந்தத்திற்கு ஆதிஶேஷன் ப்ரவர்த்தகன். (ஸ்ரீ.உ.வே. உத்தமூர் ஸ்வாமி வ்யாக்யாநம்) வைதாளிகா: போதகரா: உரிய (காலங்களை)க் கூறுபவர்கள் 10 ஶ்லோகங்கள் கொண்ட வைதாளிக பத்ததியில் முதல் ஶ்லோகமும் கடைசி ஶ்லோகமும் பாதுகே! என்ற விளிவேற்றுமை பெறுகிறது. மற்ற 8 ஶ்லோகங்களும் ஸ்ரீ ரங்கநாதனை அழைப்பதாக அமைந்துள்ளன. ஸ்ரீ வஸிஷ்டர் தஶரத குமாரர்களுக்கு நாமகரணம் செய்தார். ஆதிசேஷனின் சிஷ்யரான கர்க மஹர்ஷி ஸ்ரீ பலராமனுக்கும் ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் கம்ஸனிடமிருந்து ஆபத்து வருமோ என்று பயந்து

அலக்ஷிதோऽஸ்மின் ரஹஸி மாமகைரபி கோவ்ரஜே।

என் மக்களுக்குக் கூடத் தெரியாதபடி ரஹஸ்யமாக இந்த மாடுகள் உள்ள இடத்தில் நாமகரணம் செய்வீராக என்று கர்கரை வேண்டினர்.

ஏவம் ஸம்ப்ரார்திதோ விப்ர: ஸ்வசிகீர்ஷிதமேவ தத்।

சகார நாமகரணம் கூடோ ரஹஸி பாலயோ:॥

இவ்வாறு ப்ரார்த்திக்கப்பட்ட கர்கர் அதுவேதான் தன் விருப்பமென்று ரஹஸ்யமாக இரண்டு சிறுவர்களுக்கும் நாமகரணம் செய்தார். (ஸ்ரீமத் பாகவதம் 10.8–10,11)

இத்துணை பெருமை பெற்ற ஆதிசேஷனைவிட அதிக வாக்குவன்மை பெற்றவன் பிராட்டியின் கடாக்ஷத்துக்கு இலக்கானவன்.

இவற்றைக் கூறும் தண்டகத்தின் பகுதி இதோ-

கல்பவல்லீ ஸுமாநல்ப மாத்வீ ஜரீ கல்ப பூயோ

பவஜ்ஜல்ப பாக் கம்ஸஜித் தல்ப பங்கம் கிரா கல்பயதி, மூடோப்யஹோ!

அஹோ! = ஆஶ்சர்யம்

மூட: அபி = அறிவிலியாக இருந்தாலும்

கல்ப வல்லீ = கற்பகக் கொடியின்

ஸும அநல்ப மாத்வீ = ஏராளமான புஷ்பங்களுடைய தேனின்

ஜரீ கல்ப = வெள்ளம் போல

பூயோऽ பவத் = மேன்மேலும் உண்டாகிற

ஜல்ப பாக் = வாக்கு வன்மையுடையவனை

கிரா = வாக்கினால்

கம்ஸஜித் = கம்ஸனை ஜயித்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய

தல்ப - படுக்கையான ஆதிஶேஷனுக்கு

பங்கம் = தோல்வியை

கல்பயதி = செய்கிறான்.

பிராட்டியின் கடாக்ஷத்தின் மஹிமை சென்ற இதழிலேயே, ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் இந்த்ரனால் செய்யப்பட்ட மஹாலக்ஷ்மீ ஸ்தோத்திரத்திலிருந்து பல ஶ்லோகங்கள் உதாஹரிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ ஆழ்வானின் ஸ்ரீஸ்தவத்தின் கடைசி இரண்டு ஶ்லோகங்களை அநுஸந்தித்துத் தலைக்கட்டுவோம்–

யஸ்யா: கடாக்ஷம்ருது வீக்ஷண தீக்ஷிதேந
ஸத்யஸ் ஸமுல்லஸிதபல்லவ முல்லலாஸ।
விஶ்வம் விபர்யய ஸமுத்த விபர்யயம் ப்ராக்
தாம் தேவதேவ மஹிஷீம் ஶ்ரியமாஶ்ரயாம:॥

ப்ரளய காலத்தில் ஸகல ஜீவ வர்கமும் பகவானிடம் லயம் அடைந்துள்ளது. இந்த ஶ்லோகத்தின்

தாத்பர்யத்தை மஹாவித்வான் காஞ்சி அண்ணங்கராசார்யார் ஸ்வாமி அருளுகிறார். ''ஒரு ப்ரவ்ருத்திக்கும் யோக்ய மன்றியே துவண்டு அஸத் கல்பமாய் கிடக்கையில் ''இவ்வாத்ம வர்கத்தை ப்ரவ்ருத்தி க்ஷமமாக வேணும் என்று திருவுள்ளம் பற்று நின்ற யாவளொரு பிராட்டி அவ்வாத்ம வர்கத்தை நோக்கிக் குளிரக் கடாக்ஷிக்க முயன்றவளவிலே, அனைத்தும் துவட்சி நீங்கித் தளிரும் முறியுமாய்ப் பசுகு பசுகென்று விளங்குமே, அந்தப் பிராட்டியை சரணமடைகிறேன் என்கிறார். அதுபோலே அஸத் கல்பனாய் கிடக்கும் அடியேனையும் குளிர நோக்கி ஸத்கோஷ்டியிலே அந்வயிப்பிக்க வேணும் என்னும் ப்ரார்த்தனை இதில் உள்ளுறை.''

ஶ்லோகம் 11.

யஸ்யா: கடாக்ஷவீக்ஷாக்ஷணலக்ஷம் லக்ஷிதா: மஹேஶா: ஸ்யு:
ஸ்ரீ ரங்கராஜமஹிஷீ ஸா மாமபி வீக்ஷதாம் லக்ஷ்மீ: ॥

பிராட்டியின் கடாக்ஷ வீக்ஷணத்திற்கு க்ஷண காலம் பாத்திரமானவர்கள் பாக்கியவான்களாகிறார். அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாயகித் தாயார் அடியேனை கடாக்ஷிக்க வேணும்.

1. இரண்டாம் தண்டகத்தின் பிற பகுதிகளைப் பார்ப்போம்–

ஸ்ரீ ஶார்ங்கபாணிப் பெருமாள் ஜாஜ்வல்யமாகப் ப்ரகாஶித்துக் கொண்டு ஸேவை ஸாதிக்கிறார். அவர் பக்கலில் ஸ்ரீ மஹாலக்ஷ்மீ ரூபமாக ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் ஸேவை. கவிஶ்ரேஷ்டர், ச்லேடையாக, இரண்டு பொருள் தரக்கூடிய மஹோதாரதா என்று பிராட்டியைப் பற்றிக் கூறுகிறார். மஹா உதாரதா என்று பிரித்தால் ''மிகவும் உதாரத் தன்மை உள்ளவள்'' என்று ஒரு பொருள். அவர் நாராயணபரோ ஜ்யோதி: - நாராயணனே உயர்ந்த ஜ்யோதி ஸ்வரூபன் எனப்படுபவர். மஹஸ் என்றால் ஜ்யோதி. மஹஸ் தாரதா என்று பிரித்தால் சிறந்த ஜ்யோதி ஸ்வரூபனுக்கு

தாரமாக (பத்நியாக) இருப்பவள் என்பது இரண்டாவது பொருள். இரு பொருள் கொண்ட மஹோதாரதா எப்போதும், அகலகில்லேன் இறையும் என்றிருப்பதாக எல்லா அறிவாளிகளும் (ப்ரஹ்ம ஜ்ஞானிகளும்) கூறுகின்றனர். அந்திகே ஶார்ங்கதந்வாஹ்வயம் பாஸதே யந் மஹஸ் தத்ப்ரியாயாம் ரமாயாம் மஹோதாரதா நித்ய ஸித்தா த்விதா$^{5}$பீதி ஸர்வே புதா:

அந்திகே = (ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின்) பக்கத்தில்

ஶார்ங்கதந்வாஹ்வயம் = ஸ்ரீ ஶார்ங்கபாணீ என்னும் பெயருடைய

யத் மஹஸ் = யாதொரு ஜ்யோதி

பாஸதே = ப்ரகாஶிக்கிறதோ

தத் ப்ரியாயாம் = அந்த (ஜ்யோதி ஸ்வரூபனுக்கு) ப்ரியமான

ரமாயாம் = மஹாலக்ஷ்மீ ஸ்வரூபையான ஸ்ரீ கோமளவல்லி நாச்சியாரிடம்

மஹோதாரதா = 1. மிகவும் உதாரகுணமுடைய தன்மை

த்விதா அபி = 2. பெரிய ஜ்யோதி ஸ்வரூபனின் தாரமாக இருத்தல் என்று இருபொருளும்

நித்ய ஸித்தா = எப்போதும் இருக்கின்றன

இதி = என்று

ஸர்வே புதா: = எல்லா அறிஞர்களும் அநுபவிக்கின்றனர்.

2. ரமே ! ஶௌரி ராமே ! அரவிந்தாலயே !

ரமே ! = லக்ஷ்மியே !

ஶௌரி ராமே = ஶௌரி என்னும் பெருமாளுக்குப் ப்ரியமானவளே !

இங்கு ஶௌரி என்னும் சொல், ஶூரஸேனரின் பேரனான க்ருஷ்ணனைக் குறிக்கும். ஏனெனில் ராஸ

லீலையின்போது கோபிகள் ''ஸ்ரீ க்ருஷ்ணனை தங்கள் போக மயக்குகளால் வசப்படுத்திவிட்டதாகக் கர்வம் கொண்டனர். அவர்கள் கர்வத்தைப் போக்கி அவர்களை அநுக்ரஹிக்க எண்ணி அவர்களிடமிருந்து ஸ்ரீ க்ருஷ்ணன் மாயமாக மறைந்தார். அவனைக் காணாமல் கோபிகைகள் வருந்திப் புலம்பியவாறு இங்குமங்கும் அலைகின்றனர். அவர்களைத் தேற்ற ஸ்ரீ க்ருஷ்ணன் அவர்கள் முன் தோன்றினார். இதை ஶுகப்ரஹ்மம் கூறுகிறார். (ஸ்ரீமத் பாகவதம், தஶமஸ்கந்தம் 32-2)

> தாஸாம் ஆவிரபூத் ஶௌரி: ஸ்மயமான முகாம்புஜ: ।
> பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாத் மந்மத மந்மத: ॥

ஶௌரியான ஸ்ரீக்ருஷ்ணன், புன்சிரிப்புடன், மஞ்சள் பட்டாடையுடன், மாலை அணிந்தவராய் மந்மதனுக்கும் மோஹத்தை உண்டாக்குபவராகத் தோன்றினார்.

ஶௌரி என்னும் சொல் வஸுதேவரையும் குறிக்கும். அவர் ஶூரஸேனரின் குமாரர்.

வஸுதேவர் தேவகியைக் கல்யாணம் செய்து கொண்டு தன் புதுமனைவியுடன் ரதத்தில் ஏறிக் கொண்டு வருகிறார். இதை ஶுக மஹர்ஷி கூறுகிறார். (தஶம ஸ்கந்தம் 1.20)

> ஶௌரி: வஸுதேவ: க்ருதோத்வாஹ:
> தேவக்யா ஸூர்யயா ஸார்தம் ப்ரயாணே ரதமாருஹத்

3. அரவிந்தாலயே ! = தாமரையில் வஸிப்பவளே !

பத்மே ஸ்திதாம் என்று ஸ்ரீ ஸூக்தம் கூறும் பத்மாலயா, அரவிந்தப்பாவை, தாமரையாள் என்றெல்லாம் அவளின் தாமரை வாஸத்தைக் குறிக்கும் சொற்கள்.

4. மே கதி: ந த்வதந்யே ஸுரா:

த்வதந்யே = உன்னையல்லால் மற்ற
ஸுரா: = தேவர்கள் (தேவதைகள்)
மே = எனக்கு

கதி: = அடைக்கலம் தருபவர்களாக
ந = இல்லை.

தாயே ! உன்னைத் தவிர எனக்கு வேறு புகல் இல்லை. உன்னையல்லால் வேறு தெய்வங்கள் - தேவதாந்தரங்கள் எனக்கு அடைக்கலம் கொடுக்கவல்லார் அல்லர் - உன்னையே புகலொன்றில்லா வடியேன் ஶரணமாக அடைகிறேன் என்று முந்துற முன்னம் ஸ்ரீ ப்ரபத்தியை உபாயமாக கவிஶ்ரேஷ்டர் அநுஷ்டிக்கிறார்.

ஸ்ரீ பகவத் ராமாநுஜர் ஶரணாகதி கத்யத்தில் முதல் சூர்ணிகையில் ஸ்ரீ ப்ரபத்தியை முதலில் அநுஸந்தானம் செய்கிறார்-

அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அஶரண்ய -
ஶரண்யாம் அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்யே ।

உலகுக்கெல்லாம் தாயாயும் (முக்யமாக) எனக்குத் தாயாகவும் வேறு ரக்ஷகர் இல்லாதவர்களுக்குக் காப்பாற்றுபவளாக இருக்கிற (லக்ஷ்மியை) வேறு புகலில்லாத நான் ஶரணமாக (உபாயமாக) அடைகிறேன்.

ஸ்வாமி தேஶிகன் **ஸ்ரீஸ்துதியில்** முதல் ஶ்லோகத்தின் நான்காம் பாதத்தில் ஶ்ரியம் அஶரண: த்வாம் ஶரண்யாம் ப்ரபத்யே, **பூஸ்துதியில்** விஶ்வம்பராம் அஶரண: ஶரணம் ப்ரபத்யே, இவ்வாறே **கோதாஸ்துதியிலும்** கோதாம் அநந்ய- ஶரண: ஶரணம் ப்ரபத்யே என்று ஒவ்வோர் பிராட்டிமாரின் திருவடிகளில் வேறு புகலில்லாதவராக (உபாயமாக) ஶரணமடைகிறார். லக்ஷ்மீதந்த்ரம் 17-10ல்

ப்ராயஶ்சித்த ப்ரஸங்கேஷு ஸர்வபாபஸமுத்பவே ।
மாமேகாம் தேவ தேவஸ்ய மஹிஷீம் ஶரணம் வ்ரஜேத் ॥

எல்லா பாபங்களுக்கான ப்ராயஶ்சித்தத்தைச் செய்ய வேண்டிய ப்ரஸ்தாவத்தில் தேவதேவனான பகவானின் பத்னியான என்னொருத்தியையே ஶரணமாக அடைய வேண்டும்'' என்பது ஸ்ரீயின் திருவாக்கு.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பரதேவதா பாரமார்த்யாதிகாரத்தில் ''பதிக்கு விஶேஷணமாய்க் கொண்டு ஸ்ரீயும் பரதேவதையாய் இருக்கும் என்கைக்காக ஸ்ரீமான் என்ற விஶேஷணம்'' என்று ஸ்வாமி தேஶிகன் அருளுகிறார். அவள் ஸ்ரீ ஆதலால் அவளின் பதி ஸ்ரீமானாகிறார்

ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா - ஸீதா தேவியினாலல்லவோ அவன் ஒளிமிகுந்தவனாகிறான்.

மேற்சொன்ன அதிகாரத்தில் ''நமக்குப் பெரிய பிராட்டியாருடனே இருந்து என்றும் ஒக்கப் பரிமாறுகிற இவனை ஒழிய ப்ராப்யாந்தரமும் ஶரண்யாந்தரமுமில்லை. இத் தம்பதிகளே ப்ராப்யமும் ஶரண்யரும் என்று நிகமிக்கப்பட்டது'' இதன் திரண்ட பொருள் - பெரிய பிராட்டியோடு கூடிய எம்பெருமான்தான் நமக்கு அடையப்பட வேண்டியவரும் நமக்கு அடைக்கலம் அளிப்பவரும் ஆவார்.

ஸ்வாமி தேஶிகனின் ந்யாஸ திலகம் மூன்றாம் ஶ்லோகத்தில்

தததாரம்பே தஸ்யா கிரம் அவததாநேந மநஸா
ப்ரபத்யே தாமேகாம் ஶ்ரியம் அகிலநாதஸ்ய மஹிஷீம் ।

பெருமாளை ஶரணாகதி செய்யுமவர்கள் முதலில் பிராட்டியை (அவள் வாக்குப்படி - மேலே லகு தந்த்ரம் 17-103ல் கூறியபடி) புருஷகாரமாக ஶரணம் அடைய வேண்டும்.

ஸ்ரீமத் ஸுந்தர காண்டம் 27ம் ஸர்கத்தில் த்ரிஜடையின் ஸ்வப்னமும் அதனடியாக ராக்ஷஸிகளின் பயமும் காரணமாக ஸீதையே தங்களை ஸ்ரீராமனிடமிருந்து பயத்திலே காக்க வல்லாள் என்று பிராட்டியை ப்ரார்த்திக்கின்றனர். ஐந்து அங்கங்களையுடைய ந்யாஸம் (பரந்யாஸம்) என்ற ஶாஸ்த்ரவிதி இங்கே பூர்ணம் என்பது ஸ்வாமி தேஶிகனின் வாக்கு. அது எவ்வாறு ஶாஸ்த்ர

விதிப்படி பரந்யாஸம் என்பது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் பரிகர - விபாகாதிகாரத்தில் அருளியுள்ளார். ''இந்த ஐந்து அங்கங்களேயும்'' பிராட்டியை ஶரணமாகப் பற்றுங்கோள்'' என்று ஸாத்விகப் ப்ரக்ருதியான த்ரிஜடை ராக்ஷஸிகளுக்குச் சொல்லுகிற வாக்யத்திலும் காணலாம் - ததலம் க்ரூரவாக்யை: (ஜானகியிடம்) கூறிய கடுமையான சொற்கள் இவ்வளவே போதும். மேலும் கடுமையான சொற்களேக் கூற வேண்டாம் என்பது ப்ராதிகூல்ய வர்ஜநம். அவள் திருவுள்ளத்துக்குப் ப்ரியமில்லாததை விடுதல் என்னும் ந்யாஸத்தின் ஓரங்கம்.

ஸாந்த்வமேவா⁵பிதீயதாம் = நல்ல வார்த்தையே சொல்லப்படட்டும். இது ஆநுகூல்ய ஸங்கல்பம் - ப்ரியமானதைச் செய்தல் என்று பரந்யாஸத்தின் மற்ருேர் அங்கம்.

ராகவாத்$_3$தி$_4$ பயம் கோரம் ராக்ஷஸாநாம் உபஸ்திதம் = ராகவனிடமிருந்து கோரமான பயம் ராக்ஷஸிகளுக்கு நெருங்கி வந்துள்ளது என்று போக்கற்று நிற்கிற நிலேயைச் சொல்லுகையாலே ஆகிஞ்சந்யமும் கார்பண்யமும் சொல்லியாயிற்று. ப்ரணிபாத ப்ரஸந்நா ஹி மைதிலீ ஜநகாத்மஜா । அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்ய: ! மஹதோ பயாத்।

ஹே ராக்ஷஸிகளே ! வணங்கின மாத்திரத்தில் ப்ரஸன்னேயானவள் ஜனகர் மகளான மைதிலீ பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்ற இவள் போதும் (இவளால் முடியும்) என்பதால் ரக்ஷிஷ்யதி இதி விஸ்வாஸ: அவஶ்யம் காப்பாற்றுவாள் என்ற மஹாவிஸ்வாஸம் அபியாசாம வைதேஹீம் ஏதத்தி மம ரோசதே வைதேஹியை வேண்டுவோம். இதுவே சரியாகத் தோன்றுகிறது. இத்தால் கோப்த்ருத்வ வரணம் காப்பாற்று என்று வேண்டுதல் சொல்லியாயிற்று. இவ்வைந்துக்கும் அங்கியான ஆத்ம நிக்ஷேபம் ''ப்ரணிபாத ப்ரஸந்நா ஹி மைதிலீ ஜநகாத்மஜா'' என்பதால் சொல்லப்பட்டது. ஆகையால் ந்யாஸ: பஞ்சாங்க

ஸம்யுத: (பரந்யாஸம் ஐந்து அங்கங்கள் கொண்டது) என்ற ஶாஸ்த்ர விதி இங்கே பூர்ணம்''

மனதில் நெருடுகின்ற சில விஷயங்களைக் கூறவிரும்புகிறேன். நம் ஸ்ரீ வைஷ்ணவர்களில் பலர் - பலர் என்றே கூற வேண்டியுள்ளது - தேவதாந்தரங்களையே வணங்குகின்றனர். தேவதாந்தரங்கள் கோயிலுக்குச் செல்லும்போது அருகிலுள்ள பெருமாள் கோவிலுக்குச் செல்வதில்லை. வ்ரதமிருந்து மாலை அணிந்து கூட்டத்தோடு கூட்டமாக மலைக்குச் செல்கின்றனர். நாங்கள் மாங்காடு, திருவேற்காடு கோவில்களுக்குத்தான் செல்வோம் என்று பெருமையாகப் பேசுகின்றனர். தங்கள் வீட்டுக் குழந்தைகளுக்கு எந்த அர்த்தமும் இல்லாத - ஏன் தவறான பொருளைக் கொடுக்கக் கூடிய ஆர்த்தி முதலிய பெயர்களைச் சூட்டுகின்றனர். அமாவாஸ்யை தர்ப்பணங்களோ க்ரஹண கால ஆஹார நியமங்களோ, ஶ்ராத்தங்களோ ஏதும் கிடையாது. நம் வீட்டில் பெரிய போட்டோக்களோ அத்வைத ஸந்யாஸிகள். இத்யாதி.

நம் பூர்வாசார்யர்களும் இப்போது எழுந்தருளியுள்ள ஆசார்யர்களும் ''ஶ்ரிய:பதியான நாராயணனே நம்மால் ஆஶ்ரயிக்கப்பட வேண்டிய அவன் மட்டும்தான் மோக்ஷம் கொடுக்கவல்லவன். பிறவி வேண்டேன் என்பவர்க்கு ஆசார்யன் மூலமாக பரந்யாஸம் செய்து கொள்ள வேண்டும் என்று எத்தனை தடவை அருளியுள்ளனர்.

எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பட்ட ஆழ்வார்களில், பரதத்வ நிர்ணயம் செய்தவர் பெரியாழ்வார். கருட வாஹனத்தில் எம்பெருமான் அவருக்கு ஸேவை ஸாதித்தார். இத்துணைச் சிறப்புப் பெற்ற பெரியாழ்வார் தன் திருமொழி (4-6) காசும் கறையுடை என்ற பத்துப் பாசுரங்களில் கேஶவன், நாராயணன், கோவிந்தன், மாதவன், ஸ்ரீதரன் முதலிய எம்பெருமானின் நாமங்களால் பெயரிட்டு அழைத்தால் அன்னை நரகம் புகாள் என்று 10 தடவை அருளுகிறார்.

குருடன் பார்வையுள்ளவன் உதவியுடன் நடப்பதுபோல், நொண்டி ஓடக்காரன் உதவியுடன் ஆற்றைக் கடப்பதுபோல், ப்ரபத்தியைப் பற்றி விஶேஷமாக அறியாதவனும் வேறு மோக்ஷோபாயத்தைச் செய்ய ஶக்தி அற்றவனும் ஆசார்யனின் கருணையால் ஶரணாகதி செய்து கொண்டு மறுபிறப்பற்றவனாய் முடிவிலா பேரானந்தத்தை அடைகிறான். (ந்யாஸ திலகம் 21ம் ஶ்லோகம்) பல உபநிஷத் வாக்யங்கள், இதிஹாஸ புராணங்கள், ஸ்ரீ பாஞ்சராத்ரம், ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் என்று எல்லாவற்றிலும் ஸ்ரீமந் நாராயணனின் பரத்வமும் அவனை வஶீகரிக்க ஶரணாகதியே என்று கூறப்பட்டுள்ளன.

திருமங்கை மன்னன் (பெரிய திருமொழி 8.10.3) மற்றும் ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரோடு உற்றிலேன்.

ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு தெய்வம் உளது என்றிருப்பாரோடு சேரமாட்டோம், கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல் - குல சேகராழ்வார். இதுவே நமது நிலைப்பாடு.

சாக்கியம் கற்றோம் சமணங்கற்றோம்
ஶங்கரனாராக்கிய ஆகம நூலாராய்ந்தோம்
பாக்யத்தால் செங்கட் கரியானைச் சேர்ந்தோம்
யாம் தீதிலமே யெங்கட்கரிய தொன்றில்

என்ற திருமழிசை ஆழ்வார் பௌத்தராகி, சமணராகி, சிவ வாக்யர் என்ற பெயருடன் சைவராகி, பேயாழ்வாரின் அருளால் திருமழிசை ஆழ்வார், திருமழிசைப் பிரான் என்ற விசேஷப் பெயரையும் பெற்றார்.

அவர் தன் நான்முகன் திருவந்தாதியை இவ்வாறு தொடங்குகிறார்.

நான்முகனை நாராயணன் படைத்தான் - நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான். அவரது 96 பாசுரங்களும் நாராயணனே பரதத்வம் என்று பறைசாற்றும்.

5. ஸிந்து கன்யே ! அம்ப ! லக்ஷ்மி ! இந்திரே ! மந்திரேஷ்வக்ஷி
நிக்ஷிப்யதாம் ந: த்வயா இதி ஆநமந்தி

ஸிந்து கன்யே ! = பாற்கடலின் பெண்ணே !

அம்ப = தாயே !

லக்ஷ்மி ! = மஹாலக்ஷ்மியே !

இந்திரே ! = பெரிய ஐஸ்வர்யத்தை உடையவளே

ந: மந்திரேஷு = எங்கள் க்ருஹங்களில்

த்வயா ! = உன்னால்

அக்ஷி நிக்ஷிப்யதாம் = கடாக்ஷம் வைக்கப்படட்டும்

இதி = என்று

ஆநமந்தி = நமஸ்கரிக்கிறார்கள்

1. இரண்டாவது தண்டகத்தின் இறுதிப் பகுதியில் பிராட்டியின் திருமுக மண்டலத்தின் ஶோபையையும் அவளது கரிய கூந்தலின் அழகையும் பலவாறாகத் துதிக்கிறார் கவிவரர். அவ்யாஜ வாத்ஸல்யத்தால் தன்னை வணங்குபவர்களை மிகுந்த மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறாள்.

ப்ரகாமம் ஜகந்தி ப்ரமோதோல்லஸந்தி த்வயாऽமூநி ஸந்தி

அமூநி ஜகந்தி = இந்த உலகங்கள்

த்வயா = உன்னால் - உன் அவ்யாஜ வாத்ஸல்யத்தாலே

ப்ரகாமம் = சிறப்புடன்

ப்ரமோத = ஸந்தோஷத்தினால்

உல்லஸந்தி = மேன்மையுடன் விளங்குகின்றன.

2. பிராட்டியின் திருமுக மண்டலம் சந்த்ர கிரணங்களின் ஶோபையை ஒத்தது. அவளது கரிய கூந்தல்கள் கருத்த மேகக் கூட்டங்கள் போலுள்ளன.

பூர்ண சந்த்ரன் போன்ற திருமுகம். சந்த்ர கிரணங்கள் கூந்தலிலும் ஒளிறுகிறது. அதைப் பார்த்தால் வெளுப்பான

கயிறுகளால் கட்டப்பட்ட கருங்கூந்தல்கள் இருட்டு போல் விளங்குகின்றன. முகம் கங்கா ப்ரவாஹம் போல் வெண்மையாகவும் கரிய கூந்தல் கருத்த யமுநா ப்ரவாஹம் போல் உள்ளது. மல்லிகை மாலைகளை அழகாகத் திருக்குழல்களில் அணிந்து சிறப்பாகப் ப்ரகாஶிக்கிருள். இதற்கான தண்டகத்தின் பகுதி இதோ :

**ஸ்புரத் சந்த்ர ரஶ்மிச்சடா மிஶ்ரிதேநேவ மேக வ்ரஜேன ஸ்வ வக்த்ராத்மநா பூர்ண சந்த்ரேண பாஶ்சாத்யதேஶே ஸிதை ரஜ்ஜு ஜாலை: நிபத்தாத்மநா இவ அந்தகாரேண கங்காஜரீ ஸங்கபாஜேவ ஸௌர்யாத்மஜா, ஸ்ரோதஸா மல்லிகா மாலிகா ஶோபிநா கேஶபாஶேந நீல ப்ரகாஶேந ஸம்ஶோபிதே !**

ஸ்புரத் = ப்ரகாஶிக்கின்ற

சந்த்ர ரஶ்மி = சந்த்ர கிரணங்களின்

சடா மிஶ்ரிதேந = அழகோடு கலந்த

மேகவ்ரஜேந இவ = மேகக் கூட்டங்கள் போலவும்

ஸ்வ வக்த்ராத்மநா = தன் திருமுகமாகிற

பூர்ண சந்த்ரேண = முழு மதியாலே

பாஶ்சாத்யதேஶே = பின் புலத்தில்

ஸிதை: = வெளுப்பான

ரஜ்ஜு ஜாலை: = கயிறுகளின் தொகுதியால்

நிபத்தாத்மநா = கட்டப்பட்ட உருவையுடைய

அந்தகாரேண இவ = இருட்டு போல் (கரிய தன்மை உள்ளதும்)

கங்கா ஜரீ = கங்கையின் ப்ரவாஹத்தோடு

ஸங்க பாஜா = சேர்க்கை, பெற்ற

ஸௌர்யாத்மஜா ஸ்ரோதஸா இவ = ஸௌர்யனின் பெண்ணான யமுனையின் ப்ரவாஹம் போன்றதும்

மல்லிகா மாலிகா = மல்லிகை மாலைகளால்

பேரபிநா = அழகாக இருப்பதான

நீல ப்ரகாபேஶந = (கரு) நீலமான காந்தியையுடைய

கேஶபாஶேந = திருக்குழல்களால்

ஶோபிதே = அழகாகப் ப்ரகாஶிப்பவளே!

ஸூர்யாத்மஜா என்பதைப் பற்றி ஒரு சிறிய குறிப்பு : த்வஷ்டா என்பவர் ரூபாணாம் அதிபதி: என்று வேதத்தில் போற்றப்படுபவர். அவருடைய பெண் ஸுவர்சலா. அவள் ஸூர்யனின் மனேவி. அவர்களுக்கு மூன்று குழந்தைகள். யமன், யமுனா, வைவஸ்வத மநு.

ஸுவர்சலாவால் ஸூர்யனுடைய வெப்பத்தைத் தாங்க இயலவில்லே. சாயா என்ற தன் நிழலே ஓர் உருவமாகப் படைத்தாள். அவளிடம் ''நீ ஸூர்யனுக்குப் பணிவிடை செய். நான் தவம் செய்யச் செல்கிறேன்'' என்று கூறி ஸுவர்சலா சென்ருள். சாயாதேவி ஸூர்யனிடம் தப்தி, ஸாவர்ணிமநு, ஶ்ருதகர்மா என்று மூன்று குழந்தைகளேப் பெற்றாள். ஶ்ருதகர்மா தான் ஶனீஸ்வரனின் இயற் பெயர். யமன் மூலமாகச் சாயா தேவியைப் பற்றி அறிகிருன் ஸூர்யன். ஸுவர்சலாவைத் தேடி அலேகிருன் ஸூர்யன். கடைசியில் அவளேக் கண்டு பிடித்து அவளிடம் தன் தேஜஸ்ஸால் அஶ்வினி தேவர்கள் என்னும் இருவரைத் தோற்றுவிக்கிருன். யமன் ஶ்ருதகர்மா என்னும் ஶநீஸ்வரனின் காலே ஒடித்து விடுகிருன். அதனுல் அவன் ஶனைஶ்சர: மெதுவாகச் செல்பவன் ஆனுன். அதனுல் ஒரு ராசியில் 2-1/2 வருடங்கள் இருக்கிருன். பரம சிவனேக் குறித்துத் தவம் செய்து ஶனைஶ்சரன் ஶநீஶ்வரன் ஆனுன். நல் ஆறு= நல்ல வழி நல் ஆறு மருவி நள்ளாறு. திரு நள்ளாறு - என்று ஆயிற்று.

ஸ்ரீ கோமளாதண்டகத்துக்கு வருவோம் —

பிராட்டியின் திருக்குழல்களின் சிறப்பைப் பட்டியலிடுகிருர்.

திருக்குழல்கள் மேகக் கூட்டம் போன்றவை. மேகங்கள் பஞ்சு போல் மென்மையானவை. ஸூர்யாத்மஜா ஸ்ரோதஸா என்பதால் யமுனையின் கருமையும் குளிர்ச்சியும் நீட்சியும் த்வனிக்கின்றன.

நீல ப்ரகாஶேந என்பதாலும் கருமை கூறப் பெறுகிறது. மல்லிகா மாலிகா என்பதால் மணம்.

திருவெழுக் கூற்றிருக்கையில் திருமங்கை மன்னன் ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை என்பார்.

ஐம்பால் = ஐந்து குணங்களையுடைய

ஓதியை = கூந்தலை உடைய பிராட்டியை (அன்மொழித் தொகையால்)

அகத்து = திருமார்பில்

இருத்தினை = நிலையாக இருக்கச் செய்தாய்

ஓதி (கூந்தல்)யின் ஐந்து குணங்கள். மென்மை, கருமை, நீட்சி, குளிர்ச்சி. மணம்.

இவ்வைந்து குணங்களும் கோமளவல்லித் தாயாரின் குழற்கற்றையில் உள்ளன என்பதை மேலே பார்த்தோம்.

3. இரண்டாவது தண்டகத்தைத் தலைக் கட்டும் முகமாகப் பிராட்டியை ''நின் திருமேனி தங்கம்போல் மிளிர்கிறது. எனினும் உன்னை க்ருஷ்ண காந்தே என்று ஸ்தோத்தரிக்கின்றனர். க்ருஷ்ணகாந்தே என்பதற்கு இரண்டு பொருட்கள் உண்டு. ஒன்று - கரிய திருமேனியுடையவளே ! இரண்டு - ஸ்ரீ க்ருஷ்ணனுக்குப்பிரியமானவளே ! பிராட்டியே ! அடியேனுக்கு அருள் புரிவாயாக என்று வேண்டுகிறார்.

ஹேமபா அபி த்வம் அத்யத்புதம் க்ருஷ்ணகாந்தே।

ப்ரஸீதேதி ஸம்ப்ரார்த்த்யஸே ஸாதுபி:॥

த்வம் - நீ

ஹேமபா அபி - தங்கத்தின் காந்தியையுடையவளாக இருந்தாலும்

க்ருஷ்ணா காந்தே = கரிய காந்தியையுடையவளே
ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் ப்ரியமானவளே !

அத்புதம் = இது ஆஶ்சர்யமானது

ப்ரஸீத = அருள் புரிவாயாக

இதி = என்று

ஸாதுபி: = நல்லோர்களால்

ஸம்ப்ரார்த்யஸே = வேண்டப்படுகிறாய்.

அவள் ஹேமபா தங்கத்தின் ப்ரகாஶம் உடையவள். அவளை ஹிரண்யவர்ணாம் என்று ஸ்ரீஸூக்தம் வர்ணிக்கும். ப்ரஹ்ம புராணத்திலுள்ள ஸ்ரீலக்ஷ்மீஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தின் த்யான ஶ்லோகங்களின் லஸத் கநக ஸங்காஶாம் = மிளிர்கின்ற தங்கத்திற்கு ஸமமான திருமேனியுடையவள். தப்த ஹாடக வர்ணிநீம் = உருக்கிவிடப்பட்ட தங்கத்தின் நிறம் கொண்டவள். இவ்வாறுள்ள பிராட்டியைக் கருப்பான காந்தியை உடையவளே என்று கவிஶ்ரேஷ்டர் கூறுகிறார். அவன் க்ருஷ்ணன் - கருப்பானவன்–

கண்ணா ! நான்முகனைப் படைத்தவனே ! காரணா ! கரியாய -
பெரியாழ்வார் (5.1.6)

கருவுடை மேகங்கள் கண்டால் உன்னைக் கண்டால் ஒக்கும் கண்கள், மின்னு மாமழை தவழும் மேகவண்ணா ! (திருநெடுந்தாண்டகம் - 30) கார் கலந்த மேனியன் (திருவிருத்தம்-86) ஆழ்வார்கள் மட்டுமல்ல. யாதவர்களின் குலகுருவான கர்க்க மஹர்ஷி ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு நாமகரணம் செய்யும் போது நந்த கோபரிடம் கூறியது (ஸ்ரீமத் பாகவதம் தஶம ஸ்கந்தம் 8-13)

ஆஸந் வர்ணாஸ்த்ரயோ ஹ்யஸ்ய க்ருஹ்ணதோ அநுயுகம் தநூ:।

ஶுக்லோ ரக்த: ததா பீத இதாநீம் க்ருஷ்ணதாம் கத: ॥

ஸம்பவாமி யுகே யுகே என்றருளியவர் ஒவ்வொரு யுகத்திலும் ஒரு வர்ணமுடைய திருமேனியுடன்

விளங்குகிறார். வெண்மை, சிகப்பு, மஞ்சள் என்ற வர்ணங்களைப் பெற்றவர் இப்போது கறுத்த வர்ணத்தை அமைந்துள்ளார். அதனால் அவர் க்ருஷ்ணன் என்ற பெயர் பெறுகிறார்.

कृपिर्भूवाचकश्शब्दो णश्च निर्वृतिवाचकः ।

तयोरैक्यं परं ब्रह्म कृष्ण इत्यभिधीयते ॥

कर्पणात् कृष्णः தன் ஸௌந்தர்யத்தால் நம் மனதைத் தன் பால் இழுப்பவர் என்றும் பொருள் கூறுவர். அவன் கரியவனானதால் அவளும் கரிய திருமேனியுடையவள் க்ருஷ்ணகாந்தே என்று கவிவரர் கூறுகிறார்.

ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரத்தில் இந்த்ரநீல பத்ததியில் (20) ஶ்லோகம் 14,15ல் பாதுகா தேவியும் அவனுக்குத் தகுந்தவளாகச் செய்து கொள்கிறாள்.

பாதுகைகளில் இந்த்ர நீலக் கற்கள் இழைக்கப்பட்டுள்ளன.

*ஶ்லோகம் : 14 :-* க்ருஷ்ணநுருப ஹரி நீல விஶேஷ த்ருஶ்யா - க்ருஷ்ணனுக்கு அவன்போல் ரூபமுள்ள இந்த்ரநீலக் கற்களால் விஶேஷமாகக் காணக் கிடைப்பவள். இங்கு ஹரிக்கு ஸமமாக இருப்பதற்காக ஹரி நீலம் என்று தேஶிகன் அருள்வது கவனிக்கத்தக்கது.

*ஶ்லோகம் 15 :-* க்ருஷ்ணாந்தரங்க ருசிபி: ஹரிநீல ரத்நை:

ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு அந்தரங்கமான (மிக இஷ்டமான) ஹரி நீல ரத்னங்களைப் பாதுகை பெற்று அவனுக்கு அநுரூபையாகிறது.

ஸ்வாமி தேஶிகன் அவனையும் ஹரி நீல சிலா விபங்க நீலா: (கோபால விம்ஶதி-12) இதன் பொருள்—

இந்த்ர நீல மணித் துண்டம் போல் நீல நிறமானவன்.

ஸ்ரீ க்ருஷ்ண காந்தையை நாமும் வணங்கி அடுத்த தண்டகத்துக்குச் செல்வோம்.

**மூன்றும் தண்டகம்.**

सुमशरललनाभिरामे ! कृतापदविरामे ! रमे ! शार्ङ्गिरामे ! सदा सादरा मे मनोवृत्तिरास्तां त्वयि श्रीः । स्फुटं मूर्धजानां द्विधा संविभक्तात्मनां अन्तरे भास्वता भव्यसिन्दूर रेखान्वितेनाऽम्बुदान्तर्ललच्चञ्चलावल्लि सन्देह सन्दायिना दीर्घ सीमन्तमार्गेण संभूषितं, कुङ्कुमैरूषितं, सूक्ष्म लक्ष्मान्वितार्धेन्दुतुल्येन कस्तूरिका चित्रकोद्भासिना फालभागेन चोद्भासितम्, रोचना वासितं, मञ्जिमाध्यासितं, मन्दहासैः सितं, वक्त्रकान्ति प्रवाहोत्थ- वीचि भ्रमाधायिना रुद्रनेत्राग्निनाऽस्यापि सार्धं मया मा स्म भूद्दाहकर्मेति निश्चित्य मातृत्व संबन्धतः सूनचापाहितेनेव चापोत्तमेन भ्रुवोर्द्वन्द्वतः शोभमानं, श्रिया निस्समानं, निरस्तेन्दुमानं, श्रवः पूरनीलोत्पलद्वन्द्वमाध्वीकपानार्थं अभ्यागताभ्यां, पुरो वीक्ष्य नासात्मकं चम्पकं तद्भयेनेव पारिप्लवाभ्यां इवेन्दिन्दिराभ्यां मणीकर्णताटङ्करश्मि प्रवाह स्फुरन् मीनशङ्कावहाभ्यां, लसल्लोचनाभ्यां, ज्वलत्कुण्डल-द्वन्द्वरत्नप्रभाचित्रिताभ्यां मुराराति लीलामणी दर्पणाभ्यां कपोलस्थलाभ्यां श्रितं, लोचनेन्दीवर-त्विड् भ्रमाधायि - नीलोत्पलालङ्कृत श्रोत्रयुक्तं, सुखोत्पादशक्तं, प्रसादानुषक्तं, स्व पर्वोत्थित भ्रान्ति सन्दायि मुक्ता लसन् नासिकावंशवल्ली उज्वलं वक्त्र चन्द्रान्तरुद्भासिपीयूषबिन्दु भ्रमाधायि दन्ताश्रितं सन्दधत्यां मुखम् ॥ ३ ॥

ஸுமஶரலலநாபிராமே ! க்ருதாபத்விராமே ! ரமே ! ஶார்ங்கிராமே ! ஸதாஸாதரா மே மநோவ்ருத்திராஸ்தாம் த்வயி ஸ்ரீ: । ஸ்புடம் மூர்த்தஜாநாம் த்விதா ஸம்விபக்தாத்மநாம் அந்தரே பாஸ்வதா பவ்யஸிந்தூர ரேகாந்விதேநாऽம்புதாந்தர்லஸச் சஞ்சலா வல்லி ஸந்தேஹ ஸந்தாயிநா தீர்க்க ஸீமந்த மார்கேண ஸம்பூஷிதம், குங்குமை ரூஷிதம், ஸூக்ஷ்ம லக்ஷ்மாந்விதார்த்தேந்து துல்யேந கஸ்தூரிகா சித்ரகோத்பாஸிநா பாலபாகேந சோத்பாஸிதம், ரோசநா வாஸிதம், மஞ்ஜிமாத்யாஸிதம், மந்தஹாஸைஸ்ஸிதம், வக்த்ர காந்தி ப்ரவாஹோத்தவீசி ப்ரமாதாயிநா, ருத்ர நேத்ராக்நிநாऽஸ்யாபி ஸார்த்தம்

மயா மா ஸ்ம பூத் தாஹகர்மேதி நிஸ்சித்ய மாத்ருத்வ ஸம்பந்தத: ஸீந சாபா ஹிதேநேவ சாபோத்தமேந ப்ருவோர்த்வந்த்வத: ஸோபமாநம், ஸ்ரியா நிஸ்ஸமாநம், நிரஸ்தேந்துமாநம், ஸ்ரவ:பூர நீலோத்பலத்வந்த்வ மாத்விகபாநார்த்தம் அப்யாகதாப்யாம் புரோ வீக்ஷ்ய நாஸாத்மகம் சம்பகம் தத்பயேநேவ பாரிப்லவாப்யாம் இவேந்திந்திராப்யாம் மணீகர்ண தாடங்க ரஸ்மி ப்ரவாஹ ஸ்புரத் மீந ஸங்காவஹாப்யாம், முகே ஸ்விய பந்துப்ரமாத், ஆகதாப்யாம், லஸல்லோசநாப்யாம், ஜ்வலத் குண்டல த்வந்த்வ ரத்நப்ரபாசித்ரிதாப்யாம், முராராதி லீலாமணிதர்பணாப்யாம் கபோலஸ்தலாப்யாம் ஸ்ரிதம், லோசநேந்தீவர த்விட் ப்ரமாதாயி நீலோத்பலாலங்க்ருத ஸ்ரோத்ரயுக்மம், ஸௌகோத்பாதஸக்தம், ப்ரஸாதாநுஷக்தம், ஸ்வ பர்வோத்தித ப்ராந்தி ஸந்தாயி முக்தாலஸந் நாஸிகா வம்ஸ வல்யுஜ்ஜ்வலம், வக்த்ர சந்த்ராந்தருத்பாஸி பியூஷபிந்து ப்ரமாதாயி தந்தாஸ்ரிதம் ஸந்ததத்யாம் முகம் ॥ 3

மூன்ரும் தண்டகத்தின் ப்ரதிபத அர்த்தமும் விளக்க உரையும்

1. ஸௌம ஸர லலநாபிராமே !

ஸௌம ஸர = புஷ்பங்களையே அம்புகளாக உடையவனான மன்மதனுடைய

லலநா = பத்நீயான ரதியைக் காட்டிலும்

அபிராமே ! = அழகானவளே !

ரதியைக் காட்டிலும் பிராட்டி அழகானவள் என்ருல் பிரானும் ஸாக்ஷாத் மந்மத மந்மத:

மன்மதன் தான் மிக அழகானவன் என்ற திமிர் உள்ளவன். எம்பிரான் அவன் கொழுப்பைப் போக்கும் ஸௌந்தர்ய முடையவர்.

கந்தர்ப்ப தர்ப்ப ஹர ஸௌந்தர திவ்ய மூர்த்தே'' !

*(ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் - ஸ்லோகம் -22)*

கந்தர்ப = மன்மதனின் தர்ப = திமிரை (கொழுப்பை)

ஹர = போக்கடிக்கின்றதான ஸௌந்தர திவ்ய மூர்த்தே = அழகிய திருமேனியுடையவரே !

2. க்ருதாபத் விராமே !

வேறு புகலில்லாமல் உன்னேயே உபாயமாகவும் புருஷகாரமுமாக அண்டிய ஆஶ்ரிதர்களுடைய ஜனன மரண ஸம்ஸாரமாகிய ஆபத்திலிருந்து ஒய்வளித்து ரக்ஷிப்பவளே !

இவ்வாறு உபாய பூதையாகவும் புருஷகார பூதையாகவுள்ள பிராட்டியை ஶரணுகத ஸார்த்தவாஹஶீலா என்று கூறத் தட்டில்லே.

''ப்ரபன்னர்களின் கூட்டத்தை எம்பெருமானிடம் அழைத்துச் செல்லும் ஸ்வபாவம் உடையவள்'' என்பது இதன் பொருள்.

இந்தச் சொற்றொடர் பாதுகைகளுக்கன்றோ ஸ்வாமி தேஶிகனுல் அருளப்பட்டது. (ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம் ப்ரபாவ பத்ததி - ஶ்லோகம்-36) பாதுகையும் பிராட்டியும் வேறல்ல என்று ஸ்வாமி தேஶிகனின் திருவுள்ளம் போலும். ஏனெனில், பாதுகை திருவயோத்திக்கு திரும்பிவந்ததைக் கூறும் ப்ரதி ப்ரஸ்தான பத்ததியில் ஶ்லோகம் 16ல், அயோத்தி மக்கள் பாதுகையை ஸீதாப் பிராட்டியாகவே பார்த்தனர் என்று அருளியுள்ளார்.

த்ரஷ்டும் ததா ராகவபாதரக்ஷே !
ஸீதாமிவ த்வாம் விநிவர்த்தமாநாம் ।
ஆஸந்நயோத்யாபுரஸுந்தரீணும்
ஔத்ஸுக்யலோலாநி விலோசநாநி ॥

(கருத்து) ஏ பாதுகையே ! நீ திரும்பி வருகிறபோது ஸீதை வருகிருள் என்று நினைத்துக் கொண்டு பட்டணத்து ஸ்த்ரீகளுடைய கண்கள் உன்னேப் பார்க்க ஆசைப்பட்டன. (ஸ்ரீமத் தேரழுந்தூர் ஆண்டவனின் வ்யாக்யானம்).

3. ரமே ! ஶார்ங்கி ராமே

ரமே = லக்ஷ்மியே ! ஶார்ங்கி ராமே = ஸ்ரீ ஶாரங்கபாணிக்குப் பிரியமானவளே !

4. பிராட்டியின் திருமுக மண்டலத்தின் ஶோபையைப் பலவாருகத் துதிக்கிருர்.

பிராட்டியின் திருக்குழல் கற்றைகள் இரண்டு இணையான பகுதிகளாப் பிரிக்கப்பட்டுள்ளன. அந்தக் கேஶங்களின் நடுப்பகுதியில் மங்களகரமான ஸிந்தூரம் கோடாகக் கீறப்பட்டுள்ளது.

ஸ்புடம் மூர்தஜாநாம் த்விதா ஸம்விபக்தாத்மநாம்

அந்தரே பாஸ்வதா பவ்ய ஸிந்தூர ரேகாந்விதேந

த்விதா = இரண்டு பகுதிகளாக

ஸம்விபக்தாத்மநாம் = பிரிக்கப்பட்ட தன்மையையுடைய

மூர்தஜாநாம் = கேசங்களுடைய

அந்தரே = நடுவில்

ஸ்புடம் = தெளிவாக

பாஸ்வதா = ப்ரகாஶிக்கின்ற

பவ்ய = மங்களகரமான

ஸிந்தூர ரேகா = ஸிந்தூரக் கோடு என

அந்விதேந = கூடிய (குழற் கற்றைகள்)

இரண்டு ஸமமாகப் பிரிக்கப்பட்ட வகிட்டில் ஸிந்தூரக் கோடு மிளிர்கிறது. இது அவளுடைய மங்கலத் தன்மையைக் கூறுகிறது என்று சொல்லவும் வேண்டுமோ?

ப்ரஹ்மபுராணத்தில் உள்ள ஸ்ரீ மஹாலக்ஷ்மீ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் ப்ரஹ்ம தேவருக்கு பகவானால் அருளப்பட்டது. அந்த ஸஹஸ்ரநாமாவளியில், 448ம் திருநாமம் மங்கள தேவதாயை நம: 904வது திருநாமம் ஸர்வ மங்களாயை நம: 1007வது திருநாமம் ஸர்வ மங்கள மாங்கல்யாயை நம: அவள் மாதிரியே அவரும்

பவித்ராணும் பவித்ரம் யோ மங்களாநாம் ச மங்களம் என்று பீஷ்மர் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தின் முன்னுரையில் தர்ம புத்ரருக்கு அருளிய வாக்கு. மங்களங்களுக்கெல்லாம் சிறந்த மங்களமானவர். அவர்

பத்னீ கேஶங்களின் நடுவில் ஸிந்தூரமணிந்து மங்கள நாயகியாக ஸேவை ஸாதிக்கிருள்.

எல்லையற்ற பெருமையுடைய பிராட்டி மங்களப் பொருட்களுக்கெல்லாம் மங்களம் தருபவள் என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனின் மங்களாஶாஸனம்.

மாநாதீத ப்ரதித விபவாம் மங்களம் மங்களாநாம்

5. பிராட்டியின் கேஶம் கறுத்த மேகம் போலுள்ளது. இரண்டாகப் பிரித்துப் பின்னப்பட்ட கூந்தல் அழகாக அசைகிறது. அதைப் பார்த்தால் மேக மண்டலத்தில் ஏற்படும் மின்னலோ என்ற ப்ரமை உண்டாகிறது.

அம்புதாந்தர் லஸச் சஞ்சலா வல்லி

ஸந்தேஹ ஸந்தாயிநா தீர்க ஸீமந்தமார்கேண ஸம்பூஷிதம், குங்குமை ரூஷிதம்

அம்புதாந்த: = மேகத்திற்குள்

லஸத் = ஒளிர்கின்ற

சஞ்லா, வல்லீ = மின்னல் கொடியோ என்ற

ஸந்தேஹ = ஸந்தேஹத்தை

ஸந்தாயிநா = கொடுப்பதானதும்

தீர்க = நீளமான

ஸீமந்த மார்கேண = வகிட்டினால்

ஸம்பூஷிதம் = அலங்கரிக்கப்பட்டதும்

குங்குமை: = குங்குமத்தால்

ரூஷிதம் - (அலங்காரமாக) பூசப்பட்டதும் இவ்வாறுன குழற்கற்றை உடையவள்.

6. பிராட்டியின் திருநெற்றி பிறை சந்திரன் போல் விளங்குகிறது. நெற்றியில் குங்குமமும் கஸ்தூரீ

திலகமும் சோபையைக் கூட்டுகின்றன. கஸ்தூரீ திலகம் சற்று கருப்பாக இருக்கிறது. அதைப் பார்த்தால், பிறை சந்த்ரனில் காணப்படும் மரு (களங்கம்) மாதிரி இருக்கிறது. திருநெற்றியில் உள்ள கோரோசனையின் மணம் எங்கும் பரவுகிறது.

ஸூக்ஷ்ம லக்ஷ்மாந்விதார்த்தேந்து துல்யேந கஸ்தூரிகா சித்ரகோத்பாஸிநா பாலபாகேந சோத்பாஸிதம் ரோசநா வாஸிதம்

ஸூக்ஷ்ம = மிகச் சிறிய

லக்ஷ்ம = அடையாளத்தோடு

அந்வித = கூடிய

அர்த்தேந்து = பாதி சந்த்ரனுக்கு

துல்யேந = ஸமானமானதும்

கஸ்தூரிகா சித்ரக = கஸ்தூரீ திலகத்தினால்

உத்பாஸிதேந = விளங்குகின்ற

பால பாகேந = திருநெற்றியுடன்

உத்பாஸிதம் = விளங்குவதாகவும்

ரோசநா = கோரோசனையின்

வாஸிதம் = வாஸனையோடு கூடியதும்

7. திருமுக மண்டலத்தின் அழகு மேலும் வர்ணிக்கப்படுகிறது.

அவளது புன் முறுவல் திருமுகத்துக்கு அழகூட்டுகிறது. திருமுகத்தின் காந்தியாகிற வெள்ளத்தில் தோன்றிய அலைகள் போலுள்ளது பிராட்டியின் இரு புருவங்கள். புருவங்கள் அழகாக வளைந்துள்ளன. வில்லின் வடிவுள்ளவைகளாக இருக்கின்றன. அவைகளை நோக்குங்கால்; சிவனால் எரிக்கப்பட்ட மன்மதன் தன் வில் அழியாமல் இருக்கும் பொருட்டுத் தன் தாயாரிடம் அந்த

வில்லைக் கொடுத்துச் சென்றானோ ? அந்த வில் தாயாரின் புருவ உருவில் வில் வடிவமாக உள்ளது போலும்.

மஞ்ஜிமாத்யாஸிதம், மந்தஹாஸை: ஸிதம், வக்த்ர காந்தி ப்ரவாஹோத்த விசி ப்ரமாதாயிநா ருத்ர நேத்ராக்நிநா[s]ஸ்யாபி ஸார்த்தம் மயா மா ஸ்ம பூத் தாஹ கர்மேதி நிஸ்சித்ய மாத்ருத்வ ஸம்பந்தத: ஸ்நேசாபாஹிதேநேவ சாபோத்தமேந ப்ருவோர் த்வந்த்வத: பேபாபமாநம்

மஞ்ஜிமா = ஸௌந்தர்யம்

அத்யாஸிதம் = குடி கொண்டிருப்பதும்

மந்தஹாஸை: = புன்முறுவல்களால்

ஸிதம் = வெண்மையாகவும் (உண்மையாகவும்
பரிஹாஸமில்லாததும்)

வக்த்ர = முகத்தினுடைய

காந்தி ப்ரவாஹோத்த = காந்தியாகிற வெள்ளத்திலிருந்து உண்டான

விசி = அலையோ என்ற

ப்ரமாதாயிநா = ப்ரமத்தை (தவறான எண்ணத்தை) கொடுப்பதும்

ருத்ர = சிவனுடைய

நேத்ர அக்நிநா = கண்ணிலிருந்து தோன்றிய நெருப்பினால்

மயா ஸார்த்தம் = என்னுடன் கூட

அஸ்ய அபி = இதனுடையவும்

தாஹ கர்ம = எரிந்து போவது

மா ஸ்ம பூத் = ஏற்பட வேண்டாம்

இதி நிஸ்சித்ய = என்று தீர்மானித்து

மாத்ருத்வ = அன்னை என்னும்

ஸ்நேசாப = மன்மதனால்

ஆஹிதேந = வைக்கப்பட்ட

சாபோத்தமேந இவ = சிறந்தவில் போன்ற

ப்ருவோ: த்வந்த்வத: = இரு புருவங்களால்

ஶோபமாநம் = ப்ரகாஶிப்பதுமானதும்

8. ஶ்ரியா நிஸ்ஸமாநம் நிரஸ்தேந்துமாநம்

ஶ்ரியா = (திருமுகத்தின்) ஶோபையினால்

நிஸ்ஸமாநம் = இணையில்லாததும்

நிரஸ்த = போக்கடிக்கப்பட்ட

இந்துமாநம் = சந்த்ரனின் கர்வத்தை உடையதும்

சந்த்ரனுக்கு கர்வம் - மக்கள் சந்த்ரோதயத்தை ஆவலுடன் பார்க்கிறார்கள். சந்த்ரனின் நிலா ஜனங்களுக்கு ஸந்தோஷத்தைத் தருகிறது. நிலாவைக் காட்டி அன்னை குழந்தைக்கு அமுதூட்டுகிறாள் என்று பல சிறிய மகிழ்ச்சிகளைத் தருகிறான். வளர்வதும், தேய்வதுமான அவனுக்கு ஏன் கர்வம்?

பிராட்டி நித்யமான க்ஷேமத்தை அருளுபவள். எம்பிரான் ஸ உ ஶ்ரேயான் பவதி ஜாயமாந: அவன் பிறப்பிலி, ஸங்கல்பத்தால் ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் செய்கிறான். இவ்வாறு அவதாரம் தோறும் அவன் கீர்த்தி வளர்கிறது. பிரானைச் சொன்ன விடமெல்லாம் பிராட்டியையும் சொன்னதாக ஸம்ப்ரதாய ஸித்தம். ஆகையால் பிராட்டியின் மஹத்வத்துக்கு முன் சந்த்ரன் ஒரு பொருட்டல்ல.

இவ்வாறு கவிஶ்ரேஷ்டர் பிராட்டியின் முக லாவண்யத்தில் ஈடுபடுகிறார். திருமுகத்தின் வர்ணனை அடுத்த, இதழிலும் தொடரும்.

ஸ்ரீ கோமளவல்லி நாச்சியாருடைய திருமுக மண்டலத்தில் ஸமுதாய ஶோபையையும், திருக்குழற் கற்றைகளின் சிறப்புகளையும் கூறிப்போந்தார்.

காதணிகளின் அழகு, திருக்கண்களின் சீர்மை என்று ஒவ்வோரங்கமாக அநுபவிக்கிறார் கவி. இவை எல்லாம் திருமுக மண்டலத்தின் அழகைக் கூட்டுவதாம்.

*1.* பிராட்டி திருக்காதுகளில் ப்ரகாஶமான ஆபரணம் அணிந்துள்ளாள். இரு காதுகளில் உள்ள ஆபரணங்கள் நீல ரத்நங்களால் இழைக்கப்பட்டனபோலும். அவை நீலோத்பல புஷ்பங்களோ (கருநெய்தல் புஷ்பங்களோ) என்றப்ரமையைத் தோற்றுவிக்கின்றன. வண்டுகள் நீலோத்பல புஷ்பங்கள் என்று ப்ரமித்து அப்புஷ்பங்களிலுள்ள தேனைச் சுவைக்க வருகின்றன. காதுக் கருகில் செல்லுமுன் வண்டுகள் பிராட்டியின் திருமூக்கைப் பார்க்கின்றன. பிராட்டியின் திருமூக்கு செண்பகப்பூ போன்றுள்ளது. வண்டுகளுக்குச் செண்பகப்பூ என்றால் பயம். வண்டுகள் இங்குமங்கும் அலைந்து சஞ்சலமாக உள்ளன. இங்குமங்கும் அலைவது பிராட்டியின் கண்கள்தானோ?

**யத்கதாகத விஶ்ராந்தி வைசித்ர்யேண விவர்தநம் ।**

**தாராகாயா: கலாபிஜ்ஞா: தம் கடாக்ஷம் ப்ரசக்ஷதே ॥**

மகிழ்ச்சி தரும் கருவிழிகள் இங்குமங்கும்அசைதலே கடாக்ஷம் எனப்படும். அவளது கருவிழிகள் வண்டுகள் போல் கருமையாயுள்ளன.

ஆஞ்ஜநேயர் ஸீதாப்பிராட்டியை எங்கும் தேடி அஶோக வனத்தில் கண்டார். அவளது கஷ்டமான நிலைமையை விவரிக்கிறார். அப்போதுகூடப் பிராட்டியின் கண்கள் கருமையாக உள்ளனவாம்.

**ராமஸ்ய யதாரூபம் தஸ்யேயம் அஸிதேக்ஷணா**

*(ஸுந்தர காண்டம் அத்யாயம்-15)*

**ரக்ஷிதாம் ஸ்வேந ஶீலேந ஸீதாம் அஸிதலோசநாம்**

*(அத்யாயம்-17)*

கோமளவல்லித் தாயாரின் திருக்காதுகளில் நீல ரத்நம் இழைக்கப்பட்ட ஆபரணம் இருந்தது என்று கூறினோமல்லவா. நீல ரத்நங்களிலிருந்து எழும் ஒளிக்கற்றைகள் திருமுகமெங்கும் வெள்ளமாகப் பரவுகின்றன. வெள்ளமென்ருல் மீன்கள் இருக்க வேண்டுமே! பிராட்டியின் திருக்கண்கள் தாம் மீன்கள். மீன லோசநீ, கயல் விழியாள் என்று வர்ணிப்பது கவிகள் மரபு.

பிராட்டியின் திருமுகம் தாமரை போன்றுள்ளது. தாமரையின் இனமாகிய நீலோத்பலங்கள்ப்ரமையிஞல் வந்துள்ளன அருகில். பிராட்டியின் இரு கண்களே அந்த நீலோத்பலங்கள்.

இவற்றைக் கூறும் தண்டகத்தின் பகுதி இதோ :-

**ஶ்ரவ:பூர நீலோத்பல த்வந்த்வ மாத்வீக**

**பாநார்த்தம் அப்யாகதாப்யாம் புரோ வீக்ஷ்ய**

**நாஸாத்மகம் சம்பகம் தத்பயேநேவ**

**பாரிப்லவாப்யாம் இவேந்திந்திராப்யாம்**

**மணிகர்ண தாடங்க ரஶ்மி ப்ரவாஹ ஸ்புரந்**

**மீநஶங்காவஹாப்யாம் முகே ஸ்வீய பந்து**

**ப்ரமாத் ஆகதாப்யாம் இவேந்தீவராப்யாம்**

**லஸல்லோசநாப்யாம்.**

**ஶ்ரவ: பூர** = காதின் அணிகலன்

**நீலோத்பல த்வந்த்வ** = (நீல ரத்நங்கள் இழைக்கப்பட்டதால்) இரண்டு நீலோத்பலங்கள் என்ற தோற்றத்தைத் தருவதால்

**மாத்வீக** = தேனை; **பாநார்த்தம்** = அருந்துவதற்காக

**அப்யாகதாப்யாம்** = (அருகில் வந்தவைகளானவையும்); **புர:** = எதிரில்; **நாஸாத்மகம்** = மூக்காகிற; **சம்பகம்** = செண்பகப் பூவை; **வீக்ஷ்ய** = பார்த்து; **தத்பயேந** = அதன் பயத்தால்; **பாரிப்லவாப்யாம்** = சஞ்சலமாக உள்ள; **இந்திந்திராப்யாம்** =

வண்டுகள் போன்றதும் (திருக் கண்கள்); **மணீ** = கல்லிழைத்த **கர்ண தாடங்க** = காதணிகளின்; **ரச்மி** = ஒளிக்கற்றைகளின் **ப்ரவாஹ** = வெள்ளத்தில்; **ஸ்புரத்** = ப்ரகாசிக்கின்ற; **மீந** = மீன்களோ என்ற; **சங்காவஹாப்யாம்** = ஸந்தேஹத்தைத் தருபவவைகளும் (திருக்கண்கள்); **முகே** = திருமுகத்தில்; **பந்து** = இனத்தைச் சேர்ந்தவை என்று; **ப்ரமாத்** = ப்ரமையினால்

**ஆகூதாப்யாம்** = வந்தவைகளான; **இந்தீவராப்யாம் இவ** = இரு கருநெய்தல் புஷ்பங்கள் போன்றவைகளான; **லோசநாப்யாம்** = இரு கண்களோடு; **லஸத்** = விளங்குகின்ற (திருமுகம்)

2. பிராட்டியின் திருக்காதுகளில் இரண்டு ரத்ந குண்டலங்கள் உள. ரத்ந குண்டலங்களின் காந்தி பிராட்டியின் கன்னங்களில் பரவுகிறது. கன்னங்கள் ரத்னக் கண்ணாடிகள் போல் அழகாக உள்ளன. பகவான் தன் உருவை அந்தக் கண்ணாடிகளில்பார்க்கிறானோ என்றவாறு கன்னங்களோடு கூடிய திருமுகம்.

கண்கள் கருநெய்தல் புஷ்பம் போலுள்ளன. கருநெய்தலின் காந்தி காதுக்கும் பரவுகிறதோ என்ற ப்ரமத்தை தருபவையாய் காதுகளும் நீலோத்பலங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளாகின்றன.

**ஜ்வலத் குண்டல த்வந்த்வ ரத்ந ப்ரபா சித்ரிதாப்யாம்**

**முராராதி லீலா மணி தர்பணாப்யாம் கபோல**

**ஸ்தலாப்யாம் ச்ரிதம் லோசநேந்தீவர**

**த்விட் ப்ரமாதாயி நீலோத்பலாலங்க்ருத ச்ரோத்ர யுக்தம் ।**

**ஜ்வலத்** = ப்ரகாசிக்கின்ற; **குண்டல த்வந்த்வ** = இரு குண்டலங்களின்; **ரத்ந** = ரத்னங்களுடைய; **ப்ரபா** = காந்தியினால்; **சித்ரிதாப்யாம்** = அழகாகச் செய்யப்பட்டதாகவும்; **முராராதி** = முரன் என்னும் அஸுரனின் விரோதியான பகவானின்; **லீலா** = லீலைக்காக ஏற்படுத்தப்பட்ட

**மணி தர்பணாப்யாம்** = ரத்நிக் கண்ணாடி போன்றவைகளான; **கபோல ஸ்தலாப்யாம்** = இரண்டு கன்னப் ப்ரதேசங்களோடு; **ச்ரிதம்** = கூடியதும் (அவ்வாறான முகம்); **லோசன** = கண்

என்னும்; **இந்தீவர** = நீலோத்பலத்தின்; **த்விட்** = காந்தி தானோ என்கிற; **ப்ரமாதாயி** = ப்ரமையைத் தருகிற; **நீலோத்பல** = நீலோத்பலங்களால்; **அலங்க்ருத** = அலங்கரிக்கப்பட்ட; **ஶ்ரோத்ரயுக்தம்** = திருக்காதுகளோடு சேர்ந்ததும் (முகம்)

3. ஆஶ்ரிதர்களுடைய கஷ்டங்களைப்போக்கடித்து, பிராட்டி, ஸுகத்தைத் தருகிருள். அநுக்ரஹம் செய்வதிலேயே அவளுக்கு ஈடுபாடு. தண்டிப்பது என்பதையே அறியாதவள்.

**ஸுகோத்பாத ஶக்தம் ப்ரஸாதாநுஷக்தம்**

**ஸுகோத்பாத** = ஆஶ்ரிதர்களுக்கு ஸுகத்தை உண்டுபண்ண

**ஶக்தம்** =ஶக்தியுள்ளதும்

**ப்ரஸாத** = க்ருபை செய்வதிலேயே

**அநுஷக்தம்** = குறிக்கோளுள்ளதும் (திருமுகம்)

ஸ்வாமி தேஶிகனின் **யதிராஜ ஸப்ததி** என்னும் ஸ்ரீ ராமாநுஜரின் ஸ்தோத்திரத்தில் இரண்டாம் ஶ்லோகம் :-

**ஸஹதர்மசரீம் ஶௌரே: ஸம்மந்த்ரித ஜகத் ஹிதாம் ।**
**அநுக்ரமயீம் வந்தே நித்யம் அஜ்ஞாத நிக்ரஹாம் ॥**

பிராட்டி எம்பெருமானுடைய மக்களுக்கு ஹிதத்தைச் செய்வதன் பொருட்டு மந்த்ராலோசனை செய்கிருர். நல்லோர்களைக் காப்பாற்றுதல் முதலியவைகளில் எம்பெருமானுக்குத் துணையாய் இருக்கிருள். கருணையே உருவெடுத்து வந்தவள் போலுள்ளாள். தண்டிப்பதை அறியாதவள். பிராட்டியின் இத் தன்மையைப் பற்றி பட்டரிடம் கேட்போம் :

**மாதர்மைதிலி ! ராக்ஷஸீஸ்த்வயி ததைவார்த்ராபராதாஸ்த்வயா**
**ரக்ஷந்த்யா பவநாத்மஜால்லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா ।**
**காகம் தம் ச விபீஷணம் ஶரணமித்யுக்தி க்ஷமௌ ரக்ஷத:**
**ஸா நஸ்ஸாந்த்ர மஹாகஸஸ் ஸுகயது க்ஷாந்திஸ் தவாऽऽகஸ்மிகீ ॥**

**(ஸ்ரீ குணரத்ந கோஶ:50)**

''தாயே ! மைதிலியே ! குற்றம் புரிந்த வண்ணமாயுள்ள அரக்கியரை, அவர்களைப் பழிவாங்க நினைத்த ஹநுமானிடமிருந்து காப்பாற்றினாய். அரக்கியர் உன்னிடம் பரணாகதி செய்யவில்லை. காப்பாற்று என்று ப்ரார்த்திக்கவும் இல்லை. யார்தான் தவறு செய்வதில்லை என்று ஹநுமானின் கையைக் கட்டிப் போட்டாய்.

காகம் மூவுலகும் திரிந்து வேறு புகலில்லாமல் ராமனிடம் பரணடைந்தான். விபீஷணன் பரணம் அடைய வந்தான். அவன் ஆகாயத்தில் நிற்க, ராமன் ஓர் பட்டிமன்றம் நடத்தினுர். தலைப்பு விபீஷணனைச் சேர்ப்பதா வேண்டாமா என்று. கடைசியில் சேர்த்துக் கொண்டு விபீஷண பரணாகதி முடிவுற்றது.

பிராட்டியே ! ராமனது கோஷ்டி மிக எளிதாகச் செய்யப்பட்டது. அந்த நிர்ஹேதுக க்ருபை மஹாபராதிகளான எங்களை ஸந்தோஷப்படுத்துவதாக.

**ஐச்வர்யம் அக்ஷரகதிம் பரமம் பதம் வா**

**கஸ்மைசித் அஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய ।**

**அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப !**

**த்வம் லஜ்ஜஸே கதய கோயமுதாரபாவ:?**

*(ஸ்ரீ குணரத்ந கோப: - ச்லோகம்-58)*

''தாயே ! யாரேனுமொருவன் உன்னிடம் அஞ்ஜலி செய்கிருன். அவனுக்கு ஐச்வர்யத்தையாவது கைவல்யம் என்னும் ஆத்மாநுபவ பலனையாவது பரமபதமான மோக்ஷத்தையாவது கொடுத்துவிட்டு இவனுக்கு அஞ்ஜலிக்குத் தகுந்தது ஒன்றும் செய்யப்படவில்லையே என்று வெட்கப்படுகின்றுய். இந்த உதார குணம் எத்தகையது? கதய = சொல்லு.

**ப்ரஸாதாநுஷக்தம்** = அநுக்ரஹத்திலே ஈடுபாடுடையவள் என்று கவிச்ரேஷ்டர் அருளியதின் பீர்மையைப் பார்த்தோம்.

4. பிராட்டியின் திருமூக்கில் தொங்கும் முத்து, மூக்கின் நுனியில் தானாகவே ஒரு காலத்தில் தோன்றியதோ என்ற ஸந்தேஹத்தைத் தருகிறது. திருப்பவளவாயில் ப்ரகாஶிக்கிற பற்கள் அமிர்தத் துளிகள் போன்றுள்ளன. இவ்வாறுன திருமுகமுள்ள லக்ஷ்மியே ! என்னுடைய மன எண்ணங்கள் உன்னிடத்தில் என்றும் பக்தியுடன் கூடியதாக இருக்கட்டும் என்று மூன்ருவது தண்டகத்தை நிறைவு செய்கிருர்.

**ஸ்வபர்வோத்தித ப்ராந்தி ஸந்தாயி முக்தாலஸந்**

**நாஸிகா வம்ஶவல்லீ உஜ்வலம் வக்த்ர**

**சந்த்ராந்தர் உத்பாஸி பீயூஷபிந்து ப்ரமாதாயி**

**தந்தாஶ்ரிதம் ஸந்ததத்யாம் முகம் ॥ 3 ॥**

**ஸ்வபர்வோத்தித** = தன் பர்வகாலத்தில் எழுந்ததோ என்ற; **ப்ராந்தி** = ப்ரமையை; **ஸந்தாயி** = கொடுக்கிற; **முக்தா** = முத்தினால்; **லஸத்** = ப்ரகாஶிக்கின்ற; **நாஸிகா-வம்ஶ-வல்லீ** = கொடி ஸம்பந்தமுள்ள கொடி போன்ற திருமூக்கை உடையதும் (திருமுகம்); **உஜ்வலம்** = அதனுல் அழகாக விளங்குவதும்; **வக்த்ர சந்த்ர** = அழகிய வாயின்; **அந்த:** = உட்புறத்தில்; **உத்பாஸி** = ப்ரகாஶிக்கின்ற; **பீயூஷ** = அம்ருதத்தின்; **பிந்து** = துளிகளோ என்கிற; **ப்ரமாதாயி** = எண்ணத்தை தருகின்ற; **தந்த** = பற்களோடு; **ஆஶ்ரிதம்** = கூடியதான; **முகம்** = திருமுகத்தை; **ஸந்ததத்யாம்** = உடையவளான; **த்வயி** = உன்னிடத்தில்; **ஶ்ரீ: !** = லக்ஷ்மியே !; **மே** = என்னுடைய; **மநோவ்ருத்தி:** = எண்ண ஓட்டம்; **ஸாதரா** = பக்தியுடன் கூடியதாக; **ஆஸ்தாம்** = இருக்கட்டும்.

ஸ்ரீ கோமளவல்லித் தாயாரை கவிஶ்ரேஷ்டர், மேலே ஸ்ரீ: என்றழைக்கின்ருர். श्रीः ஶ்ரீ: என்ற திருநாமத்துக்குப் பெரியோர்கள் பல அர்த்த விஶேஷங்களை அருளியுள்ளனர்.

ஶரணுகதி கத்யத்தில் முதல் சூர்ணிகையில் பகவதீம் ஶ்ரியம் தேவீம் என்னுமிடத்திலுள்ள श्री என்பதற்குப் பின் வரும் வ்யாக்யானம் காணப்படுகிறது. அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலிருந்து எடுக்கப்பட்ட ஶ்லோகங்கள் என்று கூறப்பட்டுள்ளன.

**ச்ருணாதி நிகிலாந் தோஷாந் ஸ்ரீணாதி ச குணைர் ஜகத் ! ஸ்ரீயதே ச அகிலைர் நித்யம் ச்ரயதே ச பரம் பதம்.**

பொருள் :-

1. **நிகிலாந் தோஷான் ச்ருணாதி** = எம்பெருமானை அடையத் தடையாகவுள்ள ஆச்ரிதர்களின் எல்லா தோஷங்களையும் போக்குகிறாள்.

2. **ச்ரீணாதி குணைர் ஜகத்** =

தன் குணங்களால் உலகத்தை வ்யாபிக்கிறாள்.

**ஸ்ரீயதே ச அகிலைர் நித்யம்**

3. **எல்லோராலும் எப்பொழுதும் ஆச்ரயிக்கப்படுகிறாள்.**

4. **முக்யமான ப்ரயோஜனமான பகவானை அடைகிறாள்.**

5. **ச்ரயந்தீம்** = வேண்டுபவர்களைத் தானே அடைந்துள்ளாள்.

6. **ச்ரீயமாணாம்** = பலரால் அடையப்படுபவள்.

7. **ச்ருண்வதீம்** = ப்ரார்த்தனையை அன்புடன் கேழ்ப்பவள்.

8. **ச்ருணந்தீம்** = பாபங்களைப் போக்குபவள்

**ச்ரயதே இதி ஸ்ரீ:** எம்பெருமானைப் பிராட்டி அடைகிறாள்

**ச்ரீயதே இதி ஸ்ரீ:** ஆதிசேஷன் முதலியவர்களால் பிராட்டி ஆச்ரயிக்கப்படுகிறாள்.

ஸ்ரீ சப்தம் பல தாதுக்களிலிருந்து (வினைச் சொற்களிலிருந்து) உண்டானமையால் பல அர்த்தங்கள் இந்த ஒரு சொல்லுக்கே கூடும்.

1. श्रीङ् सेवायां **ச்ரீங் - ஸேவாயாம்** என்ற தாதுவிலிருந்து உண்டானது ஸ்ரீ என்றால் எம்பெருமானை ஆச்ரயித்திருப்பவள் அல்லது ஜீவாத்மாக்களால் ஆச்ரயிக்கப்பட்டவள்.

2. शृ विस्तारे ஶ்ரு - விஸ்தாரே = ஜீவாத்மாக்களுக்கு எம்பெருமானை ஶரணமடைவதற்கு ஏற்ற குணங்களைப் பலவாறாக வளர்க்கிறாள்.

3. शॄ = हिंसायां = ஶ்ரூ-ஹிம்ஸாயாம் = ஜீவாத்மாக்கள் எம்பெருமானை ஆஶ்ரயிக்க விடாமல் அவர்களைத் தடுக்கும் பாபங்களை ஹிம்ஸிப்பவள் - போக்குபவள்.

4. शृ-श्रवणे - ஶ்ரு-ஶ்ரவணே = தன்னை ஆஶ்ரயிக்கும் ஜீவாத்மாக்களின் குறைகளைக் கேட்கிறாள்.

கவிஶ்ரேஷ்டருடன் நாமும் பிராட்டியிடம் பக்தி பூர்வமாக ப்ரார்த்திப்போமா?

ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் புகழ் பாடும் ஸ்ரீ கோமளா தண்டகத்தின் இறுதி தண்டகமான நான்காம் தண்டகத்தின் நாகராக்ஷர வடிவமும் தமிழ் வடிவமும் தரப்படகிறது.

कलित नमद् अभीष्ट पूर्ते ! विधूतामरार्ते ! सुरीगीत कीर्ते ! स्फुरत् भव्य मूर्ते ! त्वदीयस्य कण्ठस्य भासा जितस्य स्वकीय प्रभोः सन्निधौ भङ्ग आसीन्ममेति स्ववाचा विशिष्टाभिधाने ह्रिया भं भम् इत्येकदेशं ब्रुवाणस्य शङ्खेशितुः पाञ्चजन्यस्य घोषेण युद्धाङ्गणे सर्वशङ्खाभिमानः पराहन्यते किम्? विधूयत् कर स्पर्श जातादरा चक्रवाका यदि स्युः भवेयुस्तवैतत्समाना इति प्राज्ञवर्यैः स्तुताभ्यां लसन् नाभिकूपान्त संरूढ रोमालिवल्ली गुलुच्छ भ्रमाधायकाभ्यां अमर्त्यापगाशोभित प्रान्त नीलाम्बुदाश्लेषवच्छृङ्ग मेरु द्वय भ्रान्ति सन्दायकाभ्यां समुक्तासराभ्यां कुचाभ्यां लसत् क्रोड भागे ! नमद् देवपूगे ! हरौ सानुरागे ! स्तनोर्वीधर प्रान्त सञ्जातवल्ली भ्रमाधायि बाहाग्रदेशोल्लसत् पल्लवभ्रान्ति सन्दायि पाण्यङ्गुली पंक्त्युपर्युद्भवत् कोरक श्रेणि सन्देह कृद्भिर्नखैः राजिते ! योगिभिः पूजिते ! मध्यसंयोजिते मेखलादाम्नि सर्पत्वं आशङ्कमानेन लोकेन वल्मीकमेवेति संभाविताभ्यां स्वकीयाङ्गभूपांशु

पूरे सदाऽऽवर्त शोभां वहन्त्यां स्वनाभ्यां भ्रमच्छार्ङ्गिचित्ते ! प्रशस्त प्रपत्ते ! तवोरू सुचारू जतादर्शभानू जिगद्धात्रि ! जानू कृताम्भोज खेदौ कृपा वापि पादौ समस्तेऽपि लोके समानास्त्वया के? त्वमेवासि माता सशार्ङ्ग्येव ता तवैवास्मि नित्यं तथा वच्मि सत्यं रमे ! पाहि मां पाहि मां ! देवि ! तुभ्यं नमः ॥

கலித நமதபீஷ்ட பூர்த்தே ! விதூதாமரார்தே ! ஸுகீர்த்தே கீர்த்தே ! ஸ்புரத் பவ்ய மூர்த்தே ! த்வதீயஸ்ய கண்டஸ்ய பாஸா ஜிதஸ்ய ஸ்வகீய ப்ரபோஸ்ஸந்நிதௌ பங்க ஆஸீந்மமேதி ஸ்வவாசா விஶிஷ்டாபிதாநே ஹ்ரியா பம்பம் இத்யேகதேஶம் ப்ருவாணஸ்ய ஶங்கேஶிது: பாஞ்சஜந்யஸ்ய கோஷேண யுக்தாங்கணே ஸர்வ ஶங்காபிமாந: பராஹந்யதே கிம்? விதூத்யத் கர ஸ்பர்ஶ ஜாதாதரா: சக்ரவாகா: யதி ஸ்யு: பவேயுஸ்தவைதத் ஸமாநா இதி ப்ராஜ்ஞவர்யை: ஸ்துதாப்யாம் லஸந் நாபி கூபாந்த ஸம்ரூட ரோமாலிவல்லீ குலுச்ச ப்ரமாதாயகாப்யாம் அமர்த்யாபகா ஶோபித ப்ராந்த நீலாம்புதாஶ்லேஷவத் ஶ்ருங்க மேரு த்வய ப்ராந்தி ஸந்தாயகாப்யாம் ஸமுக்தாஸராப்யாம் குசாப்யாம் லஸத் க்ரோட பாகே ! நமத் தேவ பூகே ! ஹரௌ ஸாநுராகே ! ஸ்தநோர்வீதர ப்ராந்த ஸஞ்ஜாத வல்லீ ப்ரமாதாயி பாஹாக்ர தேஶோல்லஸத் பல்லவ ப்ராந்தி ஸந்தாயி பாண்யங்குலீ பங்க்த்யுபர்யுபவத் கோரக ஶ்ரேணி ஸந்தேஹ க்ருத்பிர் நகை: ராஜிதே! யோகிபி: பூஜிதே ! மத்ய ஸம்யோஜிதே மேகலா தாம்நி ஸர்பத்வம் ஆஶங்கமாநேந லோகேந வல்மீகமேவேதி ஸம்பாவிதாப்யாம் ஸ்கியாங்க பூஷாம்ஶுபூரே ஸதாऽऽவர்த ஶோபாம் வஹந்த்யாம் ஸ்வநாப்யாம் ப்ரமச்சார்ங்கி சித்தே ! ப்ரஶஸ்த ப்ரபத்தே ! தவோரூ ஸுசாரூ ஜிதாத ர்ஶ பாநூ ஜகத் தாத்ரி ! ஜாநூ க்ருதாம்போஜ கேதௌ க்ருபா வாபி பாதௌ ஸமஸ்தேऽபி லோகே ஸமாநாஸ் த்வயா கே? த்வமேவாஸி மாதா, ஸஶார்ங்க்யேவ நேதா, தவைவாஸ்மி நித்யம் ததா வச்மி ஸத்யம், ரமே ! பாஹி மாம் பாஹிமாம் தேவி ! துப்யம் நம: ॥ 4

1. ப்ரதிபத அர்த்தமும் விளக்க உரையும் :- அவதாரிகை - இந்த தண்டகத்தில் பிராட்டியின் ரூபலாவண்யத்தையும் அவள் தன் எல்லேயற்ற கருணேயால் தேவலோகத்தவர்களேயும், பூலோகத்தவர்களேயும் ரக்ஷிப்பதையும் கூறி அருளுகிறார். அவளுடைய கருணேக்கு ஸமானமான கருணேயுடையவர் எவருமிலர் என்றும் வேறு புகலொன்றுமில்லாமல் ஸ்ரீ கோமளவல்லி நாய்ச்சியாரை வணங்கி அவள் புருஷகாரத்தோடு ஸ்ரீ பஶார்ங்கியை நமஸ்கரித்துத் தாயே ! என்னே ரக்ஷி, என்னே ரக்ஷி ! என்று கவிஶ்ரேஷ்டர் மனமுருக வேண்டுகிறார்.

கலித நமத் அபீஷ்ட பூர்த்தே : (உன்னே) வணங்குவோரின் விருப்பங்களே நிறைவேற்றுபவளே !

வணங்குபவர்களின் விருப்பங்களெல்லாம் நான்கு வகையாம் - அவை தர்மம், அர்தம், காமம், மோக்ஷம் என்பன. அவற்றுள் முதல் மூன்றும் லீலாவிபூதியான இந்நிலே உலகில் பெறப்படும் ஸுகங்கள். இவைகளே ஐஹிக புருஷார்த்தங்கள் என்றும் கூறுவர். நான்காவது புருஷார்த்தமான மோக்ஷம் என்பது ஸம்ஸாரச் சுழலிலிருந்து விடுவித்துக் கொண்டு ஸ்ரீ வைகுண்டம் என்னும் நித்யவிபூதியை அடைதல். இதை ஆமுஷ்மிக புருஷார்த்தம் என்பர். பிராட்டி ஐஹிக, ஆமுஷ்மிக புருஷார்த்தங்களேத் தரவல்லவள். ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீஸ்துதியில்

யஸ்யாம் யஸ்யாம் திஶி விஹரதே

தேவி ! த்ருஷ்டிஸ் த்வதீயா

தஸ்யாம் தஸ்யாம் அஹமஹமிகாம்

தந்வதே ஸம்பதோகா: - (ஶ்லோகம் 15ல்)

என்று அருளிச் செய்திருக்கிறார்.

தாயே ! எங்கெங்கெல்லாம் உன் கடாக்ஷம் விழுகின்றதோ, அங்கெல்லாம் எல்லாச் செல்வங்களும் போட்டி போட்டுக் கொண்டு வருகின்றன. இவைகள் ''ஐஹிக

புருஷார்த்தங்கள்'' என்று எண்ணலாம். ஊரீகர்த்தும் குமலமகிலம் ஜேதுமாதிநராதிந் தூரீகர்தும் துரித நிவஹம் த்யக்துமாத்யாம் அவித்யாம்। அம்ப ! ஸ்தம்பாவதிக ஜநந க்ராம ஸீமாந்த ரேகாம் ஆலம்பந்தே விமல மநஸோ விஷ்ணு காந்தே ! தயாம் தே. இதன் திரண்ட பொருள் = தாயே ! நன்மனத்தினர் மோக்ஷத்தை விரும்புகின்றனர். அவர்கள் மோக்ஷம் பெற நீ உதவி செய்கிறாய்.''

ஸநத்குமாரர் கார்க்யருக்கு உபதேசித்த ஸ்ரீ லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமத்தில் (நித்யாகதா55நந்தநித்யா எனத் தொடங்கும்) 233வது திருநாமம் ஸம்ஸாரார்ணவ தாரிண்யை நம: என்பது ஸம்ஸாரம் என்னும் ஸமுத்ரத்தைத் தாண்ட வைப்பவள். மோக்ஷத்தை அருளுபவள் என்பது பொருளாம்.

2. விதூத அமரார்த்தே ! = தேவர்களின் கஷ்டங்களைப் போக்கடிப்பவளே ! தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் எப்போதும் சண்டையும் சச்சரவும் தான். தேவர்களின் கஷ்டங்களைப் பிராட்டி போக்கடிக்கிறாள்.

துர்வாஸர் சாபத்தால் இந்திரன் ராஜ்யமிழந்தான். மஹாலக்ஷ்மியை ஸ்தோத்ரம் செய்தான். மஹாலக்ஷ்மியின் அருளால் அவன் ராஜ்யத்தில் மறுபடியும் ஸிம்ஹாஸநத்தில் அமர்ந்தான் (ஸ்ரீ விஷ்ணுபுராணம்).

முப்பத்து மூவரமரர்க்கு முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியே ! துயிலெழாய் ! (திருப்பாவை 20-3) 8 வஸுக்கள் 11 ருத்ரர்கள் 12 ஆதித்யர்கள், அஸ்விநீ தேவர்கள் 2 ஆக 33 இவர்கள்.

ஒவ்வொருவரிடமும் ஒரு கோடி தேவர்கள் .ள்ளனர். அதனால் முப்பத்து முக்கோடி தேவர்கள் என்பது உலக வழக்கு. முப்பத்து மூவர்களுக்கு முன் பகவான் நின்று அஸுரர்களிடமிருந்து தேவர்களைக் காப்பார். அதனால் தேவர்களின் கப்பம் அதாவது கம்பம் - நடுக்கும் தேவர்களின் நடுக்கத்தை பகவான் போக்குகிறார். பகவானைச் சொன்னவிடமெல்லாம் பிராட்டியைச் சொன்னதாக

ஸித்தாந்தம். ஆகவே கவி, பிராட்டியை, தேவர்களின் கஷ்டங்களைப் போக்கடிப்பவளே! என்று துதிக்கிறார். மேலும் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸுந்தரகாண்டத்தில், பிராட்டியின் கூற்றான அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா - ஸூர்யனிடமிருந்து அவன் ஒளியை எவ்வாறு விலக்க முடியாதோ அவ்வாறே ராகவனில்லாமல், நான் இல்லை என்பதும் இங்கு நினைவு கூறத் தக்கது.

8. ஸுரீ கித கீர்த்தே ! = தேவ ஸ்த்ரீகளால் பாடப்பட்ட கீர்த்தியை உடையவளே !

தேவ ஸ்த்ரீகள் பிராட்டியின் புகழைப் பாடுகிறார்கள். தேவ ஶ்ரேஷ்டர்களான ப்ரஹ்மா, ஶிவன் முதலியோரும் அவர்களுடைய பத்நீகளும் பிராட்டிக்கு தாஸர்களாகவும் தாஸீகளாகவும் உள்ளனர்.

ஆசார்யாணாம் அக்ரணீ: யாமுநேய: (ஸ்ரீ பாதுகாஸஹஸ்ரம் - ஶேஷபத்ததி) ஆசார்யர்களுள் உயர்ந்தவர் யாமுநேயர் என்று ஸ்வாமி தேஶிகனின் திருவுள்ளம். யாமுநேயர் என்ற ஆளவந்தாரின் ஸ்ரீ சதுஶ்ஶ்லோகியில் ப்ரஹ்மேஶாதி ஸுரவ்ரஜ: ஸதயித: த்வத் தாஸ தாஸீகண: ப்ரஹ்மா, ஶிவன் என்னும் தேவக் கூட்டம் அவர்களின் பத்னிகள் பிராட்டியின் தாஸர்களும் தா

1. ஸ்ரீமத் வரதவிஷ்ணுகவி மேலும் ஸ்ரீ கோமளவல்லி நாய்ச்சியாரின் அங்கங்களின் லாவண்யத்தில் ஆழ்கிறார். பிராட்டி அழகிய ரூபத்தை உடையவள், அவள் திருக்கழுத்து சங்கு போன்று உள்ளது. உத்தம ஸ்த்ரீகளின் கழுத்தை, ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் அறிந்தவர்கள், சங்குக்கு உபமானமாகக் கூறுவது மரபு. ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் ஸஹஸ்ரநாமாவளியில் ஓம் கம்புக்ரீவாயை நம: என்று சங்கு போன்ற கழுத்துள்ளவளே ! என்றுள்ளது நினைவு கொள்ளத் தக்கது. ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் திருக்கழுத்து எம்பெருமானின் பாஞ்ச ஜந்யம் என்ற சிறந்த ஶங்கையும் வெட்கப்படும்படிச் செய்கிறது. ஶங்கங்கள் பம் பம் என்று ஒலி எழுப்புவது இயற்கை.

இதை கவி ஸ்ரேஷ்டர் ''பாஞ்ச ஜன்யம் தன் பெருமைக்கு பங்கம் ஏற்பட்டுள்ளதை அறிந்து பங்கம் என்று முழுவதும் கூறாமல் பம் பம் என்று கூறுகிறது'' என்று உத்ப்ரேக்ஷிக்கிறார். யுத்த பூமியில் எம்பெருமான் பாஞ்ச ஜன்யத்தை ஊதினால் ஏனையோருடை சங்கங்களின் ஒலி குன்றிப் போகும் என்கிறார்.

2. ஸ்புரத் பவ்ய மூர்த்தே! த்வதீயஸ்ய கண்டஸ்ய பாஸா ஜிதஸ்ய ஸ்வகீய ப்ரபோ: ஸந்நிதௌ பங்க ஆஸீந் மமேதி ஸ்வ வாசா விஶிஷ்டாபிதாநே ஹ்ரியா பம் பம் இத்யேகதேஶம் ப்ருவாணஸ்ய ஶங்கேஶிது: பாஞ்சஜன்யஸ்ய கோஷேண யுத்தாங்கணே ஸர்வ ஶங்காபிமாந: பராஹந்யதே கிம்?

ஸ்புரத் = ஒளிர்கின்ற, பவ்ய = அழகான; மூர்த்தே ! = உருவத்தையுடையவளே !; த்வதீயஸ்ய = உன்னுடைய; கண்டஸ்ய = திருக்கழுத்தின்; பாஸா = காந்தியினால் (அழகினால்); ஜிதஸ்ய = வெல்லப்பட்டதும்; ஸ்வகீய = தன்னுடைய; ப்ரபோ: = யஜமானனின்; ஸந்நிதௌ = திருமுன்பே; மம = எனக்கு; பங்க: = தோல்வி; ஆஸீத் = ஏற்பட்டது; இதி = என்று; விஶிஷ்ட = (பங்கம் என்ற) முழுவார்த்தையை; அபிதாநே = கூறுவதில்; ஹ்ரியா = வெட்கத்தால்; பம் பம் இதி = பம் பம் என்று; ஏகதேஶம் = ஒரு பகுதியை மாத்திரம்; ப்ருவாணஸ்ய = சொல்லுகிற; ஶங்கேஶிது: = ஶங்காதிபதியான; பாஞ்சஜன்யஸ்ய = பாஞ்ச ஜந்யத்தின்; கோஷேண = ஶப்தத்தால்; ஸர்வ ஶங்க = எல்லா ஶங்குகளுடையவும்; அபிமாந: = தனித் தன்மை; பராஹந்யதே கிம் ? = போக்கடிக்கப்படுகிறதா என்ன ? போக்கடிக்கப்படுகிறது என்றே பொருள்.

3. பாஞ்ச ஜந்யத்தின் வரலாறு : (ஸ்ரீமத் பாகவதம் 10-45)

ஸ்ரீ க்ருஷ்ணனும் பலராமனும் கர்காசார்யரால் உபநயநம் செய்விக்கப்பட்டனர். உபநயநம் ஆனவுடன் வேதாத்யயநம் செய்யத் தக்கவர்களாகி ஸாந்தீபினி என்னும் ஆசார்யரிடம் சென்று வேதங்கள், வேதாங்கங்கள், உபநிஷத்துகள், தநுர்வேதம், அதனதன்

தேவதைகளைப் பற்றிய ஜ்ஞானமும் என்று 64 கலைகளையும் 64 நாட்களில் கற்றனர். குருவுக்கும் குருபத்நிக்கும் எல்லா பணிவிடைகள் செய்து வந்தனர். குருவை வணங்கி **''நாங்கள் என்ன குருதக்ஷிணை கொடுக்க வேண்டும்''** என்று ப்ரார்த்தித்தனர். ஆசார்யர் ஸ்ரீ க்ருஷ்ணனுடையவும் பலராமனுடையவும் அதிமாநுஷ - மனிதர்களுக்கு மீறிய மஹிமையைக் கண்டு தன் பத்நீயுடன் யோசித்துக் கூறலானார். ''ப்ரபாஸக்ஷேத்ரத்தில் ஸமுத்ரத்தில் விழுந்து எங்கள் குமாரன் மரணமடைந்தான். அவனை அழைத்து வந்தால் அதுவே சிறந்த குருதக்ஷிணையாகும்'' என்றார். உடனே, ஸ்ரீ க்ருஷ்ணனும் பலராமனும் ரதத்தின் மீதேறி ப்ரபாஸ க்ஷேத்ரம் சென்றனர். ஸமுத்ர ராஜனை நோக்கி ''எங்கள் குரு புத்ரனை நீர் பெரிய அலைகளால் அபஹரித்ததாகக் கேள்விப்படுகிறோம். அந்தப் புத்திரனை ஶீக்ரம் தருவீராக'' என்றனர். ஸமுத்ர ராஜன் ''நான் உங்கள் குருபுத்ரனை அபஹரிக்கவில்லை. என்னுடைய ஜலத்தில் பஞ்சஜனன் என்னும் அஸுரன் வஸிக்கிறான். அவனால் உங்கள் குருபுத்ரன் அபஹரிக்கப்பட்டான். ஆதலால், ஜலத்திற்குட் சென்று அஸுரனைக் கொன்று குருபுத்ரனை அழைத்துப் போகலாம்'' என்றார். ஸ்ரீ க்ருஷ்ணன் ஜலத்திற்குட் சென்று அஸுரனைக் கொன்று அவன் வயிற்றைக் கிழித்துப் பார்க்கையில் குரு புத்ரன் இல்லை. ஆனால் அவன் ஶரீரத்திலுண்டான ஶங்கத்தை எடுத்துக் கொண்டார். பஞ்ச ஜனனிடமிருந்து உண்டானதால் பாஞ்சஜந்யம் எனப் பெயர் பெற்றது.

4. ராம க்ருஷ்ணர்கள் ரதத்தின் மீதேறி ஸம்யமநீ என்றும் நமனார்பாடி என்றும் சொல்லப்பட்ட யமனுடைய பட்டணம் சென்று யமனிடமிருந்து குரு புத்ரனைப் பெற்று குருவிடம் ஒப்படைத்தனர்.

5. ஸ்ரீ க்ருஷ்ணனின் பாஞ்ச ஜன்யத்தின் ஶங்கொலி அளப்பரிய பெருமையுள்ளது. அவர் திரு அதரத்தில் வைத்து ஊதினால் அஸுரர்கள் நடுங்கிப் போவர். கோடிக்

கணக்கான சந்த்ரனின் வெண்மையுடையது. அந்த ஶங்காழ்வானைச் ஶரணமடைகிறேன் என்று பஞ்சாயுத ஸ்தோத்ரம், ஶங்காழ்வாரின் பெருமை கூறும்.

விஷ்ணோர் முகோத்தாநில பூரிதஸ்ய
யஸ்ய த்வநிர் தாநவ தர்ப ஹந்தா ।
தம் பாஞ்சஜந்யம் ஶஶிகோடிஶுப்ரம்
ஶங்கம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ॥

ஸ்ரீ மஹாபாரதத்தின் खिलभाग (கில பாகம்) ஆன ஸ்ரீ ஹரிவம்ஶ புராணம், விஷ்ணு பர்வத்தில் 33ம் அத்யாயத்திலும் பாஞ்சஜந்யத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ பாகவத புராணத்தில் கூறப்பட்டபடியே உள்ளது.

6. நாச்சியார் திருமொழியில் கற்பூரம் நாறுமோ என்ற ஏழாம் திருமொழி 10 பாசுரங்களும் எம்பெருமானின் பாஞ்சஜன்யத்தின் பெருமைகளைப் பரக்கப் பேசுகின்றன. இரண்டாம் பாசுரம்-

கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்து போய் ஊழியான் கைத்தலத்
திடரில் குடியேறித் தீயவசுரர்
நடலைப் படமுழங்கும் தோற்றத்தாய் நற்ஶங்கே !

அழகிய ஶங்கே ! நீ கடலில் பிறந்தாய். பஞ்ச ஜநன் என்ற அஸுரனிடம் போய் வளர்ந்தாய். பிறந்த இடத்தையும் வளர்ந்த இடத்தையும் நீ நினைப்பதில்லை. ஊழிக்காலமெல்லாம் இருப்பவனான எம்பெருமானின் திவ்ய ஹஸ்தத்தில் குடியேறி விட்டாய். தீயவர்களான அஸுரர்கள் இடர்பட ஒலிக்கும் தன்மையுடையது என்பது திரண்டபொருள்.

கடலில் பிறந்ததாக நாச்சியாரின் கூற்று. அதை பஞ்சஜநன் அபஹரித்ததாலோ, ஸமுத்ரராஜன் ஸ்ரீ

க்ருஷ்ணனிடம் தவறான தகவலைத் தந்து பஞ்சஜநனின் இறப்புக்குக் காரணமானானோ?

6. எம்பெருமான் தன் சிறப்பையெல்லாம் தன்னைப் பூர்ணமாக ஶரணமடைந்தவர்களுக்கு வழங்குபவன் அல்லவா?

"உமதடிகள் அடைகின்றேன் என்று ஒருகால் உரைத்தவரை
அமையும் இனி என்பவர்போல் அஞ்சல் எனக்கரம்வைத்து
தமது அனைத்தும் அவர் தமக்கு வழங்கியும் தாம் மிக விளங்கும்
அமைவுடை அருளாளர் அடியிணையை அடைந்தேனே."

*(அடைக்கலப்பத்து - பாசுரம் 7)*

இது ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளிய எம்பெருமானின் வள்ளல் தன்மை.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனுக்கு முன்னமேயே திருமங்கைமன்னன் பெரிய திருமொழி மன்னிலங்கு 11-3-5ம் பாசுரத்தில்

தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத்
தம்மையே யொக்க அருள் செய்வராதலால்....

7. இவ்வாறான எம்பெருமான் தன் பாஞ்சஜந்யம் போல் பல ஶங்குகளைத் தன் பாதுகா பக்தர்களான அயோத்தி மக்களுக்கு அளித்தான் போலும். அவர்கள் எல்லோரும் **ஸ்ரீ பாதுகை**யின் பட்டாபிஷேக வைபவத்தின்போது ஶங்கொலி எழுப்பினர். பதிநான்கு ஆண்டுகள் தினம் தினம் நடைபெறும் பாதுகாபிஷேகத்தின் போதும் ஶங்கொலி எழுப்பினர் என்றும் கொள்ளலாம். இந்தப் பேரொலியானது, அயோத்திமாந்தரின் ஶங்கொலி, இலங்கைவரை கேட்டதாம். ராவண வதம் முடிந்து ராமனின் வெற்றியைக் கொண்டாடும் வரையில் கேட்டதாக ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் திருவுள்ளம்.

ஆயோத்யகை: த்வதபிஷேக ஸமித்த ஹர்ஷை:
ஆத்மாபிதா: ஶ்ருதிஸுகம் நநு தே ததாநீம் ।
ராமஸ்ய ராக்ஷஸவதோசிதஶங்கநாதோ(அ)பி ஶங்காம்யஹம்
யேஷாம் த்வநிர் விஜயஶங்கரவோ பபூவ ॥

*(ஸ்ரீ பாதுகாஸஹஸ்ரம் - நிர்யாதந பத்ததி - 14)*

மற்றவர்களும் ஶங்கொலி எழுப்புவதைத் திருப்பாவையில்

செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் ஶங்கிடுவான் போதந்தார்

கூறப்பட்டுள்ளது.

தமிழர்களுக்கும் வெற்றியைக் கொண்டாட - ஶங்கொலி எழுப்புவது மரபு. பாரத நாடு ஸ்வதந்த்ரம் அடைவதை மனக்கண்ணால் கண்டு மகிழ்ந்த பாரதியார் ஆடிப் பாடி மகிழ்ந்து ஶங்கு கொண்டே வெற்றி ஊதுவோமே என்பார்.

8. பிராட்டியின் திருமார்பின் அழகை விவரிக்கிறார். திருமுலைத் தடங்கள் சக்ரவாகப் பக்ஷிகளோ என்ற ப்ரமையைத் தோற்றுவிக்கின்றன. சக்ரவாக பக்ஷிகள் ஒன்றோடொன்று சேர்ந்தே காணப்படும். அவைகளுக்கு ரத சக்ரங்கள் என்றும் பெயர். ரத சக்ரங்கள் ஒன்றுக்கொன்று இணையாக இருக்க வேண்டுமல்லவா ? காளிதாஸன் தன் மிஶ்ரகாவ்யமான ரகுவம்ஶத்தில் மூன்றாம் ஸர்கம் 24ம் ஶ்லோகத்தில்

ரதாங்க நாம்நோரிவ பாவபந்தநம்
பபூவ யத்ப்ரேம பரஸ்பராஶ்ரயம் ।
விபக்தம் அபி ஏகஸுதேந தத்தயோ:
பரஸ்பரஸ்யோபரி பர்யசீயத ॥

ரதாங்க நாம்நோ: இவ = சக்ரவாகப் பக்ஷிபோன்று திலீபன் - ஸுதக்ஷிணை தம்பதிகள் ஒருவரிடத்து ஒருவர் மிக்க அன்பு பூண்டவர்களாக இருந்தனர். ரகு என்ற பிள்ளை பிறந்தபோது அவனிடம் அன்பு செலுத்திய போதிலும் அந்த தம்பதிகளின் பரஸ்பர அன்பு குறையவில்லை. அதனால்தான் பிராட்டியின் கொங்கைகளுக்குச் சக்ரவாக பக்ஷிகளை உபமானமாகக் கூறி, அவை இரண்டும் வெகு இணையாக ஒன்றுக் கொன்று வித்யாஸமில்லாமல் இருக்கின்றன என்ற உத்தம ஸ்த்ரீகளின் ஸாமுத்ரிகா லக்ஷணத்தைக் கோடிட்டுக் காட்டுகிறார். சக்ரவாகங்கள் சந்த்ரனுடைய கிரணங்களின் ஸ்பர்ஶத்தைப் பொறுத்துக்

கொள்ளுமாகில் அவைகளை முத்துமாலையுடன் கூடிய உன் ஸ்தநங்களுக்கு உபமானமாகச்சொல்லலாம் என்று வித்வான்கள் புகழ்கிறார்கள் என்று கவி கூறுகிறார். விதூத்யத் கர ஸ்பர்ஸ ஜாதாதரா: சக்ரவாகா: யதி ஸ்யு: பவேயுஸ் ததைதத் ஸமாநா: இதி ப்ராஜ்ஞவர்யை: ஸ்துதாப்யாம் ॥

சக்ரவாகா: = சக்ரவாக பக்ஷிகள்; விது உத்யத் = விருப்பமுடையவைகளாக சந்த்ரனிடமிருந்து உண்டான; கர = கிரணங்களுடைய; ஸ்பர்ஸ = ஸ்பர்ஸத்தில்; ஜாதாதரா: = யதி ஸ்யு: = இருக்குமாகில்; ததா = அப்போது (சக்ரவாகங்கள்); ஏதத் ஸமாநா: = இவைகளுக்கு (ஸ்தநங்களுக்கு) ஸமாநமாக; பவேயு: இதி = ஆகும் என்று; ப்ராஜ்ஞவர்யை: = அறிவாளிகளால்; ஸ்துதாப்யாம் = புகழப்பட்டவைகளும்,

9. பிராட்டியின் நாபி (கொப்பூழ்) அழகாக ஆழமாக இருக்கிறது. அதன் அருகிலிருந்து மெல்லிய ரோம வரிசை கொடி போல் மேல் நோக்கிச் செல்கிறது. கொடியின் நுனியில் இரண்டு பூங்கொத்துகளோ என்ற ப்ரமையைத் தோற்றுவிக்கும் கொங்கைகள்.

லஸந் நாபி கூபாந்த ஸம்ரூட ரோமாலிவல்லீ குளுச்ச ப்ரமா தாயகாப்யாம்

லஸத் = ப்ரகாஸிக்கின்ற; நாபி கூபாந்த = நாபி என்னும் ஆழத்தின் அருகில்; ஸம்ரூட = முளைத்த; ரோமாலி = ரோமங்களின் வரிசையாகிற; வல்லீ = கொடியின்; குளுச்ச = பூங்கொத்துகளோ என்ற; ப்ரம = ப்ரமையை; ஆதாயகாப்யாம் = உண்டுபண்ணுபவைகளாயும் (அவ்வாறான ஸ்தநங்கள்).

1. நான்காவது தண்டகத்தில் மேலும் ஸ்ரீமத் வரத விஷ்ணு கவிஸ்ரேஷ்டர் பிராட்டியின் அங்க ஸோபையை வர்ணிக்கிறார். பிராட்டியின் திருமார்பில் ப்ரகாசமான முத்துமாலை விளங்குகிறது. ''ஸ்வச்சமான முத்து மாலைகளோடு உன் திருமார்பில் விளங்கும் இரு ஸ்தநங்களும் இரண்டு சிறிய கார்மேகங்கள் சிகரங்களில் வீற்றிருக்க நாலாபக்கமும் வெண்மையான

கங்கா ப்ரவாஹத்தின் காந்தி வீச உயர்ந்து நிற்கும் இரண்டு மேரு பர்வதங்களோ என்று ஸந்தேஹிக்கும்படியாய் இருக்கிறது'' - வைகுண்டவாஸீ புதுக்கோட்டை மஹாவித்வான், ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ராகவாசார்ய ஸ்வாமியால் அருளப்பட்ட பொழிப்புரையின் பகுதி. அமர்த்யாபகா ஶோபித ப்ராந்த நீலாம்புதாஶ்லேஷஶ்ருங்க மேருத்வய ப்ராந்தி ஸந்தாயகாப்யாம் ஸமுக்தாஸராப்யாம் குசாப்யாம் லஸத் க்ரோட பாகே !

அமர்த்யாபகா = தேவலோகத்திலிருந்து வந்த கங்கையாலே

ஶோபித = அழகாகச் செய்யப்பட்ட ப்ராந்த = ப்ரதேஶங்களையுடையதும் நீலாம்புத = நீலமேகத்தினுடைய ஆஶ்லேஷ = சேர்க்கையோடு கூடிய ஶ்ருங்க = ஶிகரங்களையுடையதான மேருத்வய ப்ராந்த = இரண்டு மேரு பர்வதங்களோ என்ற ப்ரமையை ஸந்தாயகாப்யாம் = தருபவைகளும் ஸமுக்தாஸராப்யாம் = முத்துமாலைகளோடு கூடியவைகளுமான குசாப்யாம் = இரண்டு ஸ்தனங்களோடு

லஸத் = விளங்குகின்ற, க்ரோடபாகே ! = திருமார்பையுடையவளே !

2. பிராட்டியை தேவர் குழாம் வணங்கி வழிபடுகிறது பிராட்டியும் புருஷகார பூதையாகி எம்பெருமானிடம் மிகுந்த அன்பு கொண்டவளாக இருக்கிருள். நமத் தேவ பூதே ! ஹரௌ ஸாநுராகே நமத் = வணங்குகின்ற தேவபூகே = தேவர்கள் கூட்டங்களையுடையவளே, ஹரௌ = ஹரியான பகவானிடம், ஸாநுராகே = அன்பு பூண்டவளே !

எம்பெருமானுக்கு ஹரி: என்ற திருநாமம் பல சிறப்புக்களைப் பெற்றது.

ப்ரஹ்மாணம் இந்த்ரம் ருத்ரஞ்ச வருணமேவ ச ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத்ஹரிரிதீர்யதே. ப்ரஹ்மா முதலாக எல்லோரையும் தன் பலத்தால் ஸம்ஹரிப்பதால் ஹரி என்றழைக்கப்படுகிருர். எல்லோரையும்

ஸம்ஹரித்துப் பிறகு அவனே எல்லோரையும் படைத்து ரக்ஷிக்கிறான். ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லா அன்று, நான்முகன் தன்னொடு தேவர் உலகோடு உயிர்படைத்தான். *(திருவாய்மொழி 4.10.1)*

ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத: ।

அநிச்சயாऽபி ஸம்ப்ருஷ்ட: த ஹத்யேவே ஹி பாவக: ஹி ॥

அறியாமல் தொட்டாலும் நெருப்பு சுடுகிறது. அவ்வாறே கெட்ட புத்தியுடையவர்கள் ஹரி: என்று மனதால் நினைத்தால் கூட, ஹரி அவர்களுடைய எல்லா பாபங்களையும் போக்கடிக்கிறார்.

நாராயணன் என்பவர் இந்த உலகில் ப்ரஸித்தமான திருடன். நான் அனேக ஜன்மங்களில் சேர்த்த ஸஞ்சித பாப மூட்டை என்னிடமிருந்தது. நாராயணனை நினைத்த மாத்திரமே அவன் பாபமூட்டையை அபஹரித்து விட்டான்!

ஸமுத்ரத்தைக் கடைந்தபோது ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தோன்றினாள்.

பச்யதாம் ஸர்வ தேவாநாம் யயௌ வக்ஷஸ்தலம் ஹரே: மற்றை தேவர்கள் எல்லோரையும் விலக்கி அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீ ஹரியின் திருமார்பை அடைந்தாள். மற்றை அமரர் யாவரும் காலத்தால் அழிபவர்கள். அவர்களிடம் ''என் ஸம்ஸாரத்தைப் போக்கி மோக்ஷம் கொடுப்பீராக'' என்று யாசிப்பது தவறு, பயனற்றது. ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ''ப்ரபத்தி யோகாதிகாரத்தில் —

ப்ரஹ்மாணம் சிதிகண்டம் ச யாச்சாந்யா தேவதா: ஸ்ம்ருதா:।

ப்ரதிபுத்தா: ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் ॥

அறிவிற் சிறந்தவர்கள், ப்ரஹ்மா, சிவன் மற்றும் உள்ள தேவர்களை வணங்குவதில்லை. ஏனெனில் அவர்களால் சிறிய பலன்களை அருளவே அவர்களுக்குச் சக்தி. மேலும் பரிகர விபாகாதிகாரத்தில்

உறவு இத்தனையின்றி ஒத்தாரென நின்ற உம்பரை நான் பிறவித் துயர் செருப்பீர் என்று இரக்கும் பிழையறவே நாராயணனே நமக்கே பறை தருவான் என்றிருக்கும் நம்மிடம், ஸம்பந்தம் சிறிதுமில்லாத ப்ரஹ்மா, ருத்ரன் முதலிய, நமக்கு ஸமமானவர் என்று கூறும்படி உள்ளவர்களிடம் மோக்ஷம் யாசிப்பது பிழையானது, பலனற்றது.

ஹரியிடம் அன்பு பூண்டவளாய் அகலகில்லேன் இறையும் என்றிருப்பவள். அவனும், மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்து உரை மார்பினன்; பூமன்னு மாது பொருந்திய மார்பன் தாமரையாள் கேள்வன்.

ஹரி: - ப்ராதஸ்மரணம் உஷ:காலத்தில் ஸ்ரீ கஜேந்த்ர மோக்ஷ ஶ்லோகங்களை முந்துற முன்னம் அநுஸந்தித்து, பஞ்சஸம்ஸ்காரம் செய்து வைத்த ஆசார்யன், அவருடைய ஆசார்யன் தனியன்களை அநுஸந்தித்து பரந்யாஸம் செய்து வைத்த ஆசார்யன் அவருடைய ஆசார்யன் தனியன்களை அநுஸந்தித்து ஹரி: என்று 7 முறை அநுஸந்தானம் செய்ய வேண்டும் என்பது பெரியோர்கள் மரபு. ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ வைஷ்ணவ தினசரி என்ற ப்ரபந்தத்தின் முதல் பாசுரத்தில் வரி இருள் அழிவழி மனம் வரும் உணர்வொடு கரிகிரி மருவிய கரியவன் அடியிணை பரிவொடு பரவு நல் அடியவர் பழவுரை அரியரி அரியரி அரியரி அரியே.

வரி இருள் = மூடிக் கொண்டிருந்த (நித்திரையாகிய) இருள்.

அழிவழி = ஒழிந்தபின், மனம் வரும் = மனத்தில் உண்டாகின்ற

உணர்வொடு = நல்ல ஞானத்துடன் கரிகிரிமருவிய = கரிய நிறங்கொண்ட பேரருளாளனுடைய அடியிணை = திருவடி இரண்டையும் பரிவொடு பரவும் = அன்புடன் போற்றுகின்ற நல் அடியவர் = சிறந்த பாகவதர்கள் பழவுரை = வெகு காலமாய் (அநுஸந்திக்கும்) ஸ்ரீஸூக்தி

அரி அரி அரி அரி அரி அரி அரியே = ஹரி: ஹரி: ஹரி: ஹரி: ஹரி: ஹரி: என்பனவே

''ஹரி என்ற பேரரவம் உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்'' (திருப்பாவை)

*(ஸ்ரீ விஷ்ணுபுராணம் (1.18.24) ப்ரஹ்லாதன் கூறுவது*

ஸம்பதைஶ்வர்யமாஹாத்ம்யஜ்ஞாந ஸந்ததிகர்மணாம் ।
விமுக்தேஶ்ச ஏகதோ லப்யமூலம் ஆராதனம் ஹரே: ॥

ஹரியை ஆராதனம் செய்வதால் ஸம்பத், ஐஶ்வர்யம், மாஹாத்ம்யம், ஜ்ஞானம், ஸந்ததி, மோக்ஷம் என்று எல்லாம் கிடைக்கும்.

*(1.22.21)* ந ஹி பாலன ஸாமர்த்யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்

ஸர்வேஶ்வரனான ஹரியைத் தவிர வேறு ஒருவருக்கும் உலகை ரக்ஷிக்கும் ஸாமர்த்யம் கிடையாது.

3. பிராட்டியின் கைவிரல்கள் துளிர்போல் மென்மையாக உள்ளன. விரல்களின் நுனியில் உள்ள வெண்மையான நகங்கள், துளிரில் உண்டான மொட்டுகளோ என்ற ப்ரமையை உண்டாக்குகின்றன.

ஸ்தந உர்வீதர ப்ராந்த ஸஞ்ஜாத வல்லீ ப்ரமாதாயி பாஹாக்ர தேஶோல்லஸத் பல்லவ ப்ராந்தி ஸந்தாயி பாண்யங்குலீ பங்க்த்யுபர்யுத்பவத் கோரக ஶ்ரேணி ஸந்தேஹ க்ருத்பிர் நகை: ராஜிதே ॥

ஸ்தந = ஸ்தனங்களாகிற; உர்வீதர = மலைகளுடைய; ப்ராந்த = அருகில்; ஸஞ்ஜாத = உண்டான; வல்லீ = கொடியோ என்னும்; ப்ரமாதாயி = ப்ரமையைத் தருகின்ற; பாஹா = திருக்கைகளுடைய; அக்ரதேஶே = நுனியில்; உல்லஸத் = ப்ரகாஶிக்கின்ற; பல்லவ = துளிரோ என்ற; ப்ராந்தி = ப்ரமையை; ஸந்தாயி = எற்படுத்துகின்ற; பாண்யகுங்குலீ = கை விரல்களின்; பங்க்தி = வரிசைகளுடைய; உபரி = மேலே; உத்பவத் = உண்டான; கோரகஶ்ரேணி = மொட்டுகளின் வரிசையோ என்கிற; ஸந்தேஹக்ருத்பி: = ஸந்தேஹத்தைத் தருகின்ற; நகை: = நகங்களால் ராஜிதே = விளங்குபவளே,

4. யோகிபி: பூஜிதே = யோகிகளால் பூஜிக்கப்பட்டவளே!

5. பிராட்டி அழகிய ஒட்டியாணம் அணிந்துள்ளாள். ஒட்டியாணத்தின் இரு முனைகளைச் சேர்க்கக் கயிறு உள்ளது. ஜனங்கள் அதைப் பாம்போ என்று ஸந்தேஹிக்கின்றனர். அவளது ஆழ்ந்த நாபியைப் பாம்புப் புற்றுதானோ என நினைக்கின்றனர். அவளது திருமேனியிலுள்ள ஆபரணங்களின் காந்தி வெள்ளமாகப் பெருகுகிறது. வெள்ளம் என்றால் சுழல் இருக்க வேண்டுமே - அவளது திருநாபியே அத்தகைய சுழலாக இருக்கிறது. ஸ்ரீ ஶார்ங்கபாணி அந்தச் சுழலின் அழகை ரஸிக்கிறார். அவரது மனமும் அந்தச் சுழலில் அகப்பட்டுக் கொண்டு சுழலுகிறது. அப்படிப்பட்ட ஸ்ரீ ஶார்ங்கியிடம் மனதைச் செலுத்தியவளே!

ஸ்ரீ கோமளாதண்டகத்தின் இறுதிப் பகுதியை அநுபவிப்போம். ஸ்ரீமத் வரதவிஷ்ணு கவி முந்துறமுன்னம் ஸ்ரீ ப்ரபத்தியை அநுஷ்டிக்கிறார். ஸ்ரீ பகவத் ராமாநுஜர், தூப்புல் பிள்ளை ஆகியோரின் வழியைப் பின்பற்றி இன்னமுதத் திருமகளென்றிவரை முன்னிட்டு என்றவாறு பிராட்டியை ஶரணமடைகிறார். மேலும் ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ பகவத்த்யாந ஸோபாநம் என்னும் ஸ்தோத்திரத்தில் ஸ்ரீரங்கநாதனின் திருமேனியின் ஒவ்வொரு பகுதியை ஒரு ஶ்லோகத்தால் வர்ணிக்கிறார். பிறகு, ஶ்லோகம் பத்தில் பாதாம்போஜம் ஸ்ப்ருஶதி பஜதே ரங்கநாதஸ்ய ஜங்காம் ஊருத்வந்த்வே விலகதி ஶநை: ஊர்த்வமப்யேதி நாபிம்.

என் மனம் ஸ்ரீரங்கநாதனுடைய தாமரை போன்ற திருவடிகளை த்யாநிக்கின்றது. கணுக்கால்களை என் மனம் ஸேவிக்கின்றது. அவரின் தொடைகளின் அழகில் என் மனம் லயிக்கின்றது' என்று கூறுகிறார். ஸ்ரீ வரதவிஷ்ணு கவியும் பிராட்டியின் திருவடிகளையும், முழங்கால்களையும் தொடைகளையும் வர்ணிக்கிறார்.

தாயே ! உன் தொடைகள் மிக அழகானவை. முழங்கால்கள் பளபளப்பாக உள்ளன. கண்ணாடியைப் பழிப்பனவாக உள்ளன. உன் திருவடிகள் கருணையே உருவெடுத்து வந்தவையோ என்று உள்ளன. கவிகள் திருவடிகளைத் தாமரைக்கு உவமையாகக் கூறுவர். தாமரைகளுக்குக் கருணை என்பது ஏது? ஆகையால் உன் கருணை பொங்கும் திருவடிகள் தாமரைக்கு வருத்தத்தை உண்டாக்குகின்றன.

ப்ரஶஸ்த ப்ரபத்தே ! தவோரு ஸுசாரு ஜிதாதர்ஶ பாநு ஜாநு ! க்ருதாம்போஜ கேதௌ க்ருபா வாபி பாதௌ

ப்ரஶஸ்த = கொண்டாடத் தகுந்த

ப்ரபத்தே ! = (உன் திருவடிகளில் செய்யும்) ஶரணாகதியை உடையவளே !

தவ = உன்னுடைய

ஊரு = தொடைகள்

ஸுசாரு = மிகவும் அழகானவை

ஜித = ஜயிக்கப்பட்ட

ஆதர்ஶ = கண்ணாடியின்

பாநு = காந்தியையுடைய

ஜாநு = முழங்கால்களை உடையவளே!

க்ருபா = க்ருபைக்கு

வாபி = (தோற்றுவாய் போலுள்ள (ஊற்று போன்ற)

பாதௌ = திருவடிகள்

க்ருத அம்போஜ கேதௌ = தாமரைகளுக்கு வருத்தத்தை உண்டாக்குகின்றன.

தோஷா: பவேயுரேதே யதி நாம தயே! த்வயா விநாபூதா:

தயா தேவியே! பகவானுடைய ஆறு குணங்களாகிற ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்ய, சக்தி, தேஜ: என்பன தயையில்லாதுபோனல் தோஷங்களாகிவிடும் என்னும்போது தாமரையின் வருத்தம் தவிர்க்க வொண்ணுதது.

2. எல்லா உலகிலும், தாயே! உனக்கு ஸமானமானவர்கள் யார்? எவருமில்லை என்பார் கவிச்ரேஷ்டர்.

''உனது பர்த்தா லோகநாதனான புருஷோத்தமன். உனது படுக்கை, ஆஸநம் ஸாக்ஷாத் ஆதிசேஷன். வேதஸ்வரூபியான கருடன் உன் வாஹநம். ப்ரஹ்மா, சிவன் முதலிய தேவக் கூட்டம் தம் தம் மனைவிகளோடு உனக்குப் பணிவிடை செய்கின்றனர்.

உன் பெருமையை உன் ப்ரிய பர்த்தாவாலும் அவ்விட்டுக் கூற இயலாது - காந்தஸ்தே புருஷோத்தம: பணிபதி: சய்யாஸநம் வாஹநம்

வேதாத்மா விஹகேச்வர: யவநிகா மாயா ஜகந்மோஹிநீ ।

ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜ: ஸதயித: த்வத்தாஸ தாஸீகண:

யஸ்யாஸ்தே மஹிமாநம் ஆத்மந இவ

த்வத் வல்லபோபி ப்ரபு: நாலம் மாதும்

நீ தான் எங்கள் தாய். அந்த சார்ங்கீதான் எங்கள் ஈச்வரன். தாயே! உன்னைத் தவிர வேறு புகலறியேன். எப்போதும் உன்னுடையவனாக இருப்பேன். இது ஸத்யம். தாயே! லக்ஷ்மி என்னை ரக்ஷி என்னை ரக்ஷி என்று தாயாரின் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு கதறுகிறார். ''கள்வனாகாமல், ஆத்மாபஹாரம் செய்யாமல், தன் ஆத்மாவை உரியவனிடம் சேர்க்க, பிராட்டியின் புருஷகாரத்தை அவலம்பித்து அவளது திவ்ய சரணாரவிந்தங்களில் ஆத்மாவை ஸமர்ப்பித்து க்ருதார்த்தராகிறார்.

ஸமஸ்தேऽபி லோகே ஸமாநாஸ் த்வயா கே?

த்வமேவாஸி ऽமாத: ஸ ஶார்ங்க்யேவ நேதா ।

தவைவாஸ்மி நித்யம் ததா வச்மி ஸத்யம்

ரமே ! பாஹி மாம், பாஹி மாம் தேவி ! துப்யம் நம: ॥ 4

ஸமஸ்தே = எல்லா; லோகே அபி = உலகத்திலும்; த்வயா ஸமாநா: = உனக்கு ஸமமானவர்கள்; கே = யார்? ஒருவருமில்லை; த்வமேவ = நீதான்; மாதா அஸி = என் தாயாக இருக்கிறாய்; ஸ ஶார்ங்கீ ஏவ = அந்த சார்ங்கபாணி தான்; நேதா = தலைவன்; ஸர்வேஶ்வரன்; நித்யம் = எப்போதும்; தவ ஏவ = உன்னுடையவனாகவே; அஸ்மி = இருக்கிறேன்; ததா = அவ்விதமே; ஸத்யம் = உண்மையாகவே; வச்மி = கூறுகிறேன்; ரமே ! = லக்ஷ்மி ! மாம் பாஹி என்னை ரக்ஷி; மாம் பாஹி = என்னைக் காப்பாற்று; தேவி ! = தேவி !; துப்யம் நம: = உனக்கு நமஸ்காரம் (உன்னை ஶரணமடைகிறேன்).

இவ்வாறு ஸ்ரீ கோமலவல்லித் தாயாரின் ஸௌந்தர்யத்திலும் ஸௌஶீல்ய, பரத்வ குணங்களில் ஆழங்கால்பட்ட ஸ்ரீ வரதவிஷ்ணு கவி ஒரு ஶ்லோகத்தால் தண்டகத்தை நிறைவு செய்கிறார்.

अतिमृदुलवचनगुम्भं वरमेत द्वरदविष्णु कविकथितम्।

दण्डकरूपं कोमलवल्ली मनोमुदे भवतु ॥

அதிம்ருதுவசநகும்பம் வரமேதத்வ த்வதே விஷ்ணுகவிகதிதம் ।

தண்டகரூபம் ஸ்தோத்ரம் கோமளவல்லீ மநோமுதே பவது ॥

மிக எளிதான வார்த்தைகளால் தொடுக்கப்பட்டதும் வரதவிஷ்ணு கவியால் இயற்றப்பட்டதுமான தண்டகரூபமான இந்த ஸ்தோத்ரம் ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் திருவுள்ளத்துக்கு உகப்பாக அமையட்டுமென்று ப்ரார்த்திக்கிறார்.

ஸ்ரீபாரத்வாஜ வம்ஶ முக்தாபலீபூத கவிகுலதிலக
பதவாக்ய ப்ரமாண பாராவார பாரீண
மஹாமஹோபாத்யாய மஹாகவி வேலாம்பூர்
ஸ்ரீ வரதவிஷ்ண்வார்ய க்ருதிஷு

**॥ ஸ்ரீ கோமளா தண்டகம் ஸம்பூர்ணம் ॥**

கவிகுல திலக, பதவாக்ய ப்ரமாண பாராவார பாரீண, மஹாமஹோபாத்யாய மஹாகவி என்னும் பிருதுகள் பெற்றவரும் பாரத்வாஜ வம்ஶத்தின் முத்தென விளங்குபவரான வேலாம்பூர் ஸ்ரீ வரதவிஷ்ண்வார்யரின் ஸ்ரீ கோமளா தண்டகம் நிறைவு பெறுகிறது.

முடிவுரை :- ஏடறியேன், எழுத்தறியேன் சீலமில்லா சிறியேனையும் ஒரு பொருளாக்கி ஸ்ரீமதாண்டவன் (ஸ்ரீமுஷ்ணம்) ''ஸ்ரீ கோமளாதண்டகத்தை அர்த்தத்துடன் எழுது. அதை ஸ்ரீரங்கநாத பாதுகாவில் ப்ரசுரிக்கச் செய்கிறேன்'' என்று அருளியாயிற்று. பவபூதி என்னும் மஹாகவி ''உத்தரராம சரிதத்தில் கூறுவார். ரிஷீணும் புநராத்யாநாம் வாசம் அர்த்தோநுதாவதி - ரிஷிகளான நம் ஆசார்யர் மொழிந்தது அவ்வாறே நடக்கும். ஆசார்யாளின் அருளாசியும் ஸ்ரீ கோமளவல்லித் தாயார் ஸ்ரீ சார்ங்கியின் கருணை ப்ரவாஹத்தாலே, இந்த வ்யாஸத்துடன் கூடிய ஸ்ரீ கோமளா தண்டகம் மார்ச் 2007ல் தொடங்கி தற்போது நிறைவு பெருகிறது.

ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயமேவ காரிதவாந்.

ஸ்ரீ கோமளாதண்டகத்தில் வ்யாக்யானத்தில் உள்ள சிறப்புப் பகுதிகள் யாவும் எந்தையாரிடமிருந்து அறிந்தவையே. பித்ரே ப்ரஹ்மோபதேஷ்ட்ரே மே குரவே தைவதாய ச என்று இந்நூலை ஸமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீமதே வரதவிஷ்ண்வார்ய மஹாதேஶிகாய நம:

ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேஶிகாய நம:

॥ शुभम् ॥

